# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

எழுமின், விழிமின், குறிசாரும்வரை நில்லாது செல்மின்! — சுவாமி விவேகானந்தர்

தொகுதி 57 பிங்கள ஸூ புரட்டாசி மீ இதழ் 9



ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர் :: சென்னை-600 004

22.9.77

# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்


| தொகுதி—57 | பிங்கள ஞூ புரட்டாசி மீ | இதழ் 9 |
|---|---|---|


## பொருளடக்கம்

பக்கம்



# உங்களுடைய பத்திரிக்கை

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் திருவருளைப் பெற்ற பேரன்பிற்குரிய
ஆன்மீகச்
சகோதர சகோதரிகளுக்கு,

கடவுளின் கிருபையை முன்னிட்டு எழுதுவது. அன்பும் வணக்கங்களும். ஸ்ரீராம கிருஷ்ண விஜயத்தின் **ஆயுள் சந்தாதரராகத்** தங்களைப் பதிவுசெய்து கொண்ட அன்பர்களின் பட்டியலை மிகவும் மகிழ்ச்சியோடு கீழே தருகிறோம். இந்தப் பட்டியல் தொடர்ந்து வெளியிடப்படும். அதோடு மற்றவர்களையும் ஆயுள் சந்தாதாரராக வேண்டுகிறோம். ஏனெனில், இது உங்களுடைய பத்திரிகை அல்லவா? அதனுடைய வளர்ச்சிக்கு நீங்கள் உங்களுடைய பங்கைச் செலுத்த வேண்டாமா?

உங்களுக்கு வரும் பத்திரிகையை நீங்களும் படித்து மற்றவர்களும் படிக்கக் கொடுங்கள். ஏனெனில், தானங்களிலேயே மிகச் சிறந்த தானம் ஞான தானமே ஆகும். அதுவே, பரபரப்பும் வெற்று ஆரவாரங்களும் நிறைந்த இப்போதைய சமுதாயத்திற்கு அமைதி தரும் ஜீவ நீரும் ஆகும். என்றும்போல் அன்பு ஏற்றுக் கொள்ளுங்கள். மீண்டும் வணக்கங்கள். ஹரிஓம் தத் ஸத் !

தர்மத்தின் தொண்டில் தங்களின் அன்பிற்குரிய,
நிர்வாகி
**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**

**RVLM - 64**
Mrs. Vijaya Rajagopalan,
Desika Bhavanam,
543, Adenwala Road,
Matunga,
BOMBAY–400 019.

**RVLM - 65**
Thiru J. Halduri,
Athigaratty Vill. & P.O.,
Via. OOTACAMUND,
THE NILGIRIS.

**RVLM - 66**
Thiru A. Kandaswamy,
Mohan Auto Stores,
METTUPALAYAM–641 301.
The Nilgiris.

**RVLM - 67**
Thiru N. Krishnappa,
Hermitage,
Pudumund P.O.,
OOTACAMUND,
The Nilgiris.

**RVLM - 68**
Dr. N. M. Krishnan,
Sarada Clinic,
Bombay Castle,
OOTACAMUND,
The Nilgiris,

**RVLM - 69**
Vivekananda Centinary Girls' High School,
13 & 14, Saravana Mudali St.,
Near Mint,
MADRAS–600 001.

**RVLM - 70**
Sri Ramakrishna Math National School,
6, Krishnappa Naicken Agraharam Street,
MADRAS–600 001.

**RVLM - 71**
Koviloor Madalayam Andavar Mandram,
KOVILOOR P.O.,
Managiri Via.
Ramnad Dist.

**RVLM - 72**
Smt. G. Maragatha Meenakshi,
W/o Thiru S. Gopalan,
Senior Surveyor (Mining),
Dalmia Cement (B) Ltd.,
D/27 Canteen Upstair,
KALLAKUDI–621 651.
Trichy Dist.

**RVLM - 73**
Thiru V. Devarajulu Reddiar, B.A.,
Old Jolarpettai,
JOLARPETTAI, P.O.,
N.A. Dist.

**RVLM - 74**
Thiru C. Munuswamy Reddiar,
Chinnamottur Village,
KETTANDAPATTY P.O.,
Via. Jollarpettai,
N.A. Dist.

**RVLM - 75**
Thiru G. Radhakrishnan,
No. 8, Malayappan Street,
Mannady,
MADRAS–600 001.




# ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்

ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்
நன்றே நினைமின் நமன்இல்லை

— திருமூலர்

தொகுதி 57 | பிங்கள ஞூ புரட்டாசி மீ | இதழ் 9

## பிரார்த்தனை

शुक्लांबरधरं विष्णुं शशिवर्णं चतुर्भुजम् ।
प्रसन्नवदनं ध्यायेत् सर्वविघ्नोपशान्तये ॥

—गणपति-ध्यानम्

சுக்லாம்பரதரம் விஷ்ணும் சசிவர்ணம் சதுர்ப்புஜம் |
ப்ரஸன்னவதனம் த்யாயேத் ஸர்வவிக்னோபசாந்தயே ||

— கணபதி தியானம்

எங்கும் நிறைந்தவரும் (எனினும் அன்பர்களுக்குகந்த வடிவம் ஏற்பவரும்) வெண்மையான ஆடை உடுத்தவரும், நிலவு போன்ற ஒளி உள்ளவரும், நான்கு கைகளை உடையவரும், ஆனந்தம் பொங்கும் முகமண்டலத்தை உடையவரும் ஆகிய கணபதியை எல்லா இடையூறுகளும் நீங்குவதற்காக தியானம் செய்ய வேண்டும்.

பெற்ற தாய்தனை மகமறந் தாலும்
பிள்ளையைப் பெறுந்தாய் மறந்தாலும்
உற்ற தேகத்தை உயிர் மறந்தாலும்
உயிரை மேவிய உடல் மறந்தாலும்
கற்ற நெஞ்சகங் கலை மறந்தாலும்
கண்கள் நின்றிமைப்பது மறந்தாலும்
நற்றவத்தவர் உள்ளிருந் தோங்கும்
நமச்சி வாயத்தை நான் மறவேனே.

— வடலூர் வள்ளலார்





# ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருள் வாக்கு

நிறைகுடம் நீர் ததும்பி ஒலிப்பதில்லை. அதைப்போல கடவுளை உணர்ந்தவனும் அதிகம் பேசுவதில்லை.

வாழ்க்கையில் எவ்வளவுதான் துன்ப துயரங்களை இடைவிடாமல் அனுபவித்தாலும், இலௌகிகனுடைய மனம், பெண்ணாசை பொன்னாசைகளை எளிதில் வெறுத்து பகவானிடம் திரும்பாது.

திருமண வாழ்க்கையின் சுகானுபவத்தைச் சிறிய குழந்தைகள் அறிய மாட்டார்கள். அதைப்போலவே தெய்வத்துடன் மனம் தோய்ந்து ஒன்றுபடும்போது விளையும் தெய்விக பரவசத்தை இலௌகிகர்கள் அறியவே மாட்டார்கள்.

மனிதன் என்ற பெயரை மட்டும் வகிப்பவர் (மனுஷ்யர்), ஆன்மிக விழிப்புப் பெற்றவர் (மன்—ஹுஷ்யர்) என்று மனிதர்கள் இரண்டு வகைப்படுவர். கடவுளை அடைய வேண்டும் என்னும் ஒரேஒரு நோக்கம் கொண்டவர்கள் இரண்டாவது சொன்ன வகுப்பினர். காமமும் பண ஆசையும் பிடித்து அலைபவர்கள் மனிதர் என்ற பெயரை மட்டுமே வகிக்கிறார்கள்.

உண்மையான சமயப் பிரசாரம் எப்படி இருக்கும்? மற்றவர்களுக்கு உபதேசம் செய்வதைவிட்டு, அதற்குப் பதிலாக எப்போதும் கடவுள் வழிபாட்டில் ஈடுபட்டால் அதிலேயே போதுமான உபதேசம் இருக்கும். பிறப்பு இறப்புப் பந்தங்களில் இருந்து தன்னைத் தானே விடுவித்துக்கொள்ள முயற்சி செய்பவன்தான் உண்மையான சமயப் பிரசாரகன்.

வீட்டுக்கூரையின் மேலிருந்து விழும் மழைத் தண்ணீர், புலித்தலை போன்ற குழாயின் மூலமாகக் கீழே தரையில் விழுகிறது. அப்போது பார்ப்பதற்குப் புலித்தலையிலிருந்தும் தண்ணீர் விழுவதாகத் தோன்றினாலும், உண்மையில் அது ஆகாயத்திலிருந்தே விழுகிறது. அதைப் போலவே தெய்விகம் வாய்ந்த மனிதர்கள் கூறும் அருள்மொழிகள் கேவலம் மனிதர்களிடம் இருந்து வருபவைகளாகத் தோன்றினாலும், உண்மையில் அவை பகவானின் சன்னதியிலிருந்தே வருகின்றன.

சர்க்கரையோ, பணியாரமோ விழுந்துள்ள இடத்துக்கு எறும்புகள் தானாக வருகின்றன, கற்கண்டாக மாற நீ முயற்சி செய். அதாவது ஆத்மஞானம் அடையப்பெற்ற இனிமையாகிய கற்கண்டாக நீ மாறினால், பக்தர்களாகிய எறும்புகள் தானாகவே உன்னிடம் வந்து சேரும். கடவுளிடம் இருந்து ஆணையைப் பெறாமல் நீ உபதேசம் செய்துகொண்டே போனால், உன்னுடைய பிரசாரம் பயனற்றதாக முடியும். ஒருவரும் நீ சொல்வதைக் கவனிக்கமாட்டார்கள். ஒருவன் பக்தியின் மூலமாகவோ, வேறு வழிகளாலோ முதலில் பகவானை அடைய வேண்டும். பிறகு அவன் ஈசுவரனுடைய ஆணை பெற்றால், எல்லா இடங்களிலும் சமயப் பிரசாரம் செய்ய வல்லவனாவான்.

ஓம்



# விஜயதீபம்

## அணையா விளக்கு சுவாமி அபேதானந்தர்

### பெற்றோர்

அஹிரிதோலா என்பது கல்கத்தாவைச் சேர்ந்த ஒரு பகுதி. அங்கு ரசிகலாலா சந்திரர் தமது மனைவி நாயன்தாரா தேவியுடன் வாழ்ந்து வந்தார்.

ரசிகலால், கல்கத்தாவில் இருந்த ஒரு பள்ளிக் கூடத்தில் ஆங்கிலம் போதிக்கும் ஆசிரியராகப் பணியாற்றினர்.

அவருடைய மனைவி நாயன்தாரா, காளி தேவியிடம் பெரும் பக்தி பூண்டவள். அவள் காளி தேவியிடம் பிள்ளை வரம் வேண்டி, தவமிருந்துப் பிரார்த்தித்தாள். அவளுடைய மனம் தோய்ந்த உண்மைப் பிரார்த்தனைகளும் தவமும் வீண்போகவில்லை. காளிதேவியின் திருவருளால் நாயன்தாரா 1866-ஆம் ஆண்டு அக்டோபர் 2-ஆம் நாள் ஓர் ஆண் குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

தேவியின் திருவருளால் பிறந்த குழந்தையை, நாயன்தாரா காளிதேவியின் பிரசாதமாகவே மனப்பூர்வமாக நம்பினள். குழந்தைக்குக் காளிபிரசாத் என்னும் பெயரையே சூட்டினள். இந்தக் காளிபிரசாத் சந்திரர்தான் பிற்காலத்தில் சுவாமி அபேதானந்தர் ஆனர்.

1883 ஆண்டின் கடைசிப் பகுதியில் காளி பிரசாத் முதல்முறையாக ஸ்ரீராமகிருஷ்ணரை தரிசிப்பதற்காக வந்தார்.

### இளமைப் பருவம்

தமது இளமைப் பருவத்திலேயே காளிபிரசாத் ஆன்மிக வாழ்க்கையில் ஈடுபாடு கொண்டிருந்தார். பள்ளிப்படிப்பு, விளையாட்டுகள், ஓவியக்கலை ஆகியவைகளில் அசாதாரணமான திறமை இளமையிலேயே அவருக்கு இருந்தது. அதோடு சம்ஸ்கிருதம், ஆங்கிலம், பகவத்கீதை போன்ற இந்துமத நூல்கள், மேலைநாட்டுத் தத்துவங்கள் ஆகியவைகளையும் கற்றுத் தேர்ந்தார்.

காளிபிரசாத் தமது பதினெட்டாவது வயதில் பிரவேசப் பரீட்சையில் தேறினர். பிறகு ஆதிசங்கரரின் அத்வைத நூல்களில் ஆர்வம் கொண்டு ஆழ்ந்து படிக்க ஆரம்பித்தார்.

கல்கத்தாவில் நடைபெறும் கிறிஸ்தவம், பிரம்ம சமாஜம், இந்து மதம் ஆகிய சொற்பொழிவுகளில் கலந்துகொண்டு கவனமோடு கேட்டார். பலவித தத்துவக் கருத்துகளிலும் ஈடுபாடு கொண்ட காளிபிரசாத்துக்கு, இந்திய தத்துவ ஞானமாகிய ஆறு தரிசனங்களிலும் ஈடுபாடு ஏற்பட்டது. அதிலும் குறிப்பாக, பதஞ்சலி மகரிஷி எழுதிய யோகசூத்திரங்கள் அவரது உள்ளத்தைக் கவர்ந்தன.

யோக சூத்திரங்களில் கூறப்பட்டுள்ள வழிமுறைகளைப் பின்பற்றித் தாமும் ஒரு யோகியாக வேண்டும்; நிர்விகல்ப சமாதி நிலையைப் பெற வேண்டும்—என்று காளி (பிரசாத்) மனதார விரும்பினர்.

ஒருநாள் அவர் ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தார். அந்த நூலில் 'குரு ஒருவருடைய துணையைப் பெறுமல் ஒருவராலும் யோகியாக முடியாது' என்று குறிப்பிடப்பட்டிருந்தது. அதைப்படித்ததுமுதல், மெய்ஞானி

---

சுவாமி அபேதானந்தர் அக்டோபர் மாதத்தில் பிறந்தார். செப்டம்பர் மாதத்தில் மறைந்தார். அவரது நினைவாக, இந்த இதழின் விஜய தீபத்தில் 'அணையா விளக்கு' இடம் பெறுகிறது.

யாகிய குரு ஒருவரைச் சந்தித்துத் தொடர்பு கொள்ளவேண்டும் என்ற ஆவல் காளியின் உள்ளத்தில் கொழுந்து விட்டெரிந்தது.

### குருதேவரின் திருவடிகளில்

இந்த நிலையில்தான், தமது பள்ளித்தோழர் ஒருவர் மூலமாக பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் குறித்து முதல்முறையாகக் காளிபிரசாத் கேள்விப்பட்டார். உடனே ஆவலுடன் ஸ்ரீ ராமகிருஷ்ணரைத் தரிசிப்பதற்காக தட்சிணேஸ்வரம் சென்றார். ஸ்ரீ ராமகிருஷ்ணரின் தரிசனமும் தொடர்பும் அவருக்குக் கிடைத்தன.

'நீ உன்னுடைய முற்பிறவியில் ஒரு பெரிய யோகியாக இருந்தாய். ஆகவேதான் இந்தச் சின்னஞ்சிறிய வயதிலேயே யோகம் பழகும் ஆவல் உனக்கு மிகுதியாக இருக்கிறது. உனக்கு இதுதான் கடைசி பிறவி' என்று ஸ்ரீ ராமகிருஷ்ணர் காளிபிரசாத்திடம் சொல்லி அவருக்கு மந்திர தீட்சையும் கொடுத்தார்.

'உன்னுடைய புருவங்கள் ஸ்ரீகண்ணபிரானின் புருவங்களை நினைவூட்டுகின்றன. உன்னிடம் ஸ்ரீகிருஷ்ண பரமாத்மாவின் அம்சம் காணப்படுகிறது' என்றும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் காளிபிரசாத்திடம் கூறியதுண்டு.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் காளி பிரசாத்தை அன்புடன் நேசித்தார்.

ஸ்ரீராமகிருஷ்ணரின் மேற்பார்வையில் காளி பிரசாத் பலவித ஆத்ம சாதனங்களையும் பழக ஆரம்பித்தார். குருதேவரின் திருவருள் காரணமாகப் பல அற்புதமான ஞானக்காட்சிகளும் தெய்விக அனுபவங்களும் அவ்வப்போது அவருக்குக் கிடைத்தன.

ஒருநாள் காளிபிரசாத் ஒரு ஞானக்காட்சியைப் பெற்றார். அந்த ஞானக்காட்சியில் அவர், இறைவனின் அவதாரமாக முற்காலத்தில் வாழ்ந்த பல அவதாரபுருஷர்கள் அடங்கிய ஒரு குழுவில் ஸ்ரீராமகிருஷ்ணரும் ஒருவராக வீற்றிருந்ததைக் கண்டார். சிறிது நேரத்தில் அங்கிருந்த அவதார புருஷர்கள் ஒருவர் பின் ஒருவராக ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உடலிலே புகுந்து மறைந்ததையும், பிறகு ஒவ்வொருவராக மீண்டும் பழையபடியே வெளியே வந்ததையும் கண்டார். இந்த அனுபவத்தைத் தாமே சுயமாகப் பெற்றதன் மூலம், முன்னாளில் அவதாரம் செய்தருளிய அவதார புருஷர்கள் அனைவரும் ஓர் உருவம் பெற்று ஸ்ரீராமகிருஷ்ணரின் வடிவில் இப்போது திகழ்ந்து கொண்டிருக்கிறார்கள்— என்ற ஆழ்ந்த ஒரு மன உறுதி காளிபிரசாத்துக்கு ஏற்பட்டது.

ஆன்மிகத்தைச் சேர்ந்த எந்தத் துறையிலும் சுலபமாகப் புகுந்து செல்லும் மனம், காளிக்கு இயல்பாக அமைந்திருந்தது. ஆதலால் அவர் தியானம் செய்யும்போதெல்லாம் எப்போதும் தேவர், தேவியர்கள் ஆகியவர்களுடைய தெய்விகத் திருவுருவங்களைக் கண்டார்.

ஒரு சமயம் காளி மெய்மறந்து தியானத்தில் ஆழ்ந்திருந்தார். அந்த தியான நிலையில் அவர், எல்லா தேவ தேவியர்களின் உருவங்களும் பிரகாசத்துடன் ஒளி வடிவமாக விளங்கிய ஒருவரின் (ஸ்ரீராமகிருஷ்ணரின்) உடலில் சென்று கலந்து ஒன்றாகி மறைந்ததைக் கண்டார். இவ்விதம் தான் கண்ட ஞானக்காட்சியைப் பற்றி ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் காளி பிரசாத் விளக்கமாகச் சொன்னார். இதைக் கேட்ட ஸ்ரீ குருதேவர் 'ஆஹா! நீ உன்னுடைய ஞானக் காட்சியில் வைகுண்டத்தைப் பார்த்தாய்! இனிமேல் இப்படிப்பட்ட ஞானக் காட்சிகளைப் பெறமாட்டாய். அவைகளை எல்லாம் கடந்த மேலான நிலையை நீ அடைந்தாகி விட்டது!' என்று தெரிவித்தார்.

அவ்விதம் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்னது, பிறகு உண்மையே ஆயிற்று. அதுமுதல் காளி தியானத்தில் ஆழும்போது, மெய்ப்பொருளாகிய பிரம்மத்தின் அருவத் தன்மையை உணர்ந்தார்; பிரம்மத்தோடு தொடர்புடைய வரம்பில்லாத தன்மை, பரந்து விரிந்த தன்மை ஆகிய பண்புகளை உணர்ந்தார். தியான காலத்தில் அதுவரையிலும் அவருக்குப் பழக்கமாக இருந்த தேவ தேவியர்களின் உருவங்கள், ஸ்ரீராமகிருஷ்ணர் சொன்ன நாள்முதல் தோன்றாமல் மறைந்துவிட்டன.

ஸ்ரீராமகிருஷ்ணரின் அந்தரங்க சீடர்களுள் காளியும் ஒருவர் ஆவார். குருதேவரின் தொடர்பு ஏற்பட்டதுமுதல், அவரைத் தரிசிப்பதற்காகக் காளிபிரசாத் அடிக்கடியும் தட்சிணேஸ்வரம் வருவதை வழக்கமாகக் கொண்டார். சில சமயங்களில் அவர் குருதேவருடனேயே ஒன்று அல்லது இரண்டு நாட்கள் தட்சிணேஸ்வரத்திலேயே தங்கிவிடுவதும் உண்டு.

காளிபிரசாத் தூண்டில் போட்டு மீன் பிடிப்பதில் வல்லவர். அடிக்கடி அவர் தட்சிணேஸ்வரக் கோவிலைச் சேர்ந்த குளங்களில் மீன் பிடிப்பது வழக்கம். ஒருநாள் அவர் மூன்று நான்கு மீன்களைக் கோயில் குளத்திலே பிடித்தார்.

இந்த விவரம் ஸ்ரீராமகிருஷ்ணருக்குத் தெரிய வந்தது. அவர் காளிபிரசாத்திடம் 'நீ ஏன் இப்படிப்பட்ட கொடுமைக்காரனாக இருக்கிறாய்?' என்று கேட்டு மிகவும் கோபித்துக் கொண்டார்.

காளி உடனே 'அது எப்படி கொடுமையான செயலாகும்? நான் தவறு ஒன்றும் செய்யவில்லையே. நாம் அனைவரும் ஆத்மா; ஆத்மாவுக்கு அழிவு கிடையாது. ஆகவே நான் உண்மையில் மீன்களைக் கொல்லவில்லை' என்று சொன்னார்.

இதைக் கேட்ட குருதேவர் காளியிடம் 'குழந்தாய், ஆத்மாவைக் குறித்த கருத்தை நீ தவறாக வாழ்க்கையில் கடைப்பிடிக்கிறாய். ஆத்மாவை அனுபூதியில் உணர்ந்த ஆத்மஞானி ஒருவர், எந்தக் காலத்திலும் பிறரிடம் கொடுமையாக நடந்து கொள்ளவே மாட்டார். கொடுமை செய்வது என்பதே அவருடைய இயல்புக்கு முற்றிலும் முரணானதாக இருக்கும். அப்படிப்பட்ட ஒருவர் தன்னுடைய வாழ்க்கையில் ஓர் அடியும் தவறாக எடுத்து வைக்கமாட்டார். அவர் ஒருபோதும் எந்தவிதமான தவறும் செய்யமாட்டார்; செய்யவும் முடியாது. அவருடைய உள்ளம் தவறான வழியில் ஒருபோதும் சிந்திக்காது, செல்லாது—இந்த உண்மையை நீ ஆழ்ந்து சிந்தித்துப் பார்' என்று கூறி அறிவுறுத்தினார்.

இவ்விதம் குருதேவர் சொன்னதும், காளி பதில் ஒன்றும் பேசவில்லை. மௌனமாக அங்கிருந்தே சென்று விட்டார். அதன்பிறகு மூன்று நாட்கள் வரையிலும் ஸ்ரீ ராமகிருஷ்ணர் சொன்ன கருத்துகளையே காளி ஆழ்ந்து சிந்தித்துக் கொண்டிருந்தார். அதன் விளைவாக இறுதியில், குருதேவர் தெரிவித்த கருத்துகளில் அடங்கிய உட்பொருள் அவருக்குப் புரிந்தது.

1885–86ல் ஸ்ரீ ராமகிருஷ்ணர் நோயுற்றார். அப்போது அவருடைய அருகில் இருந்து இளைஞர்களாகிய சீடர்கள் தொண்டு செய்தார்கள். அவர்களிலே காளியும் ஒருவராக இருந்தார்.



**குருதேவரின் மறைவிற்குப் பிறகு**

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரின் மகாசமாதிக்குப் பிறகு, நரேந்திரரின் தலைமையில் சீடர்கள் ஒன்றுகூடி சன்னியாசம் ஏற்றுக்கொண்டார்கள். அப்போது காளிபிரசாத்துக்கு சுவாமி அபேதானந்தர் என்னும் சன்னியாச நாமத்தை சுவாமி விவேகானந்தர் சூட்டினார்.

சாஸ்திரங்களைப் படிப்பதிலும் தியானம் செய்வதிலும் சுவாமி அபேதானந்தர் மிகமிக ஆழ்ந்து ஈடுபட்டார். அவருடைய கடுமையான தவ வாழ்க்கையைக்கண்ட சகோதர சீடர்கள் அவரைக் 'காளி தபஸ்வி', 'காளி வேதாந்தி' என்று அழைத்தார்கள்.

பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் குறித்தும் தூயஅன்னை ஸ்ரீசாரதா தேவியாரைக் குறித்தும் சுவாமி அபேதானந்தர் சம்ஸ்கிருத மொழியில் அற்புதமான ஸ்தோத்திரப் பாடல்களை இயற்றினார். இப்போதும் இந்தப் பாடல்களை உலகம் முழுவதிலுமுள்ள பக்தர்கள் பயன்படுத்தி வருகிறார்கள்.

அபேதானந்தர் சன்னியாசம் ஏற்ற பிறகு, பல புண்ணிய ஸ்தலங்களுக்குச் சென்று தனித்திருந்து தவம் பழகினார். பல இடங்களுக்கும் யாத்திரையாகச் சென்றார். அப்போது சாஸ்திரங்களைக் கற்றறிந்த பல பண்டிதர்களோடு பழகி தமது சாஸ்திர ஞானத்தையும் வேதாந்த ஞானத்தையும் வளர்த்துக் கொண்டார்.

**மேலைநாடுகளில் வேதாந்தப் பணி**

1896-ஆம் ஆண்டு சுவாமி விவேகானந்தர் லண்டனில் தங்கியிருந்தார். அவருடைய அழைப்புக்கு இணங்கி வேதாந்தப் பிரசாரப் பணியை மேற்கொள்வதற்காக அபேதானந்தரும் லண்டன் சென்றார்.

ஓர் ஆண்டு காலம் அவர் இங்கிலாந்திலே இருந்தார். அப்போது அந்த நாட்டைச் சேர்ந்த பல இடங்களிலும் சுவாமி அபேதானந்தர், வேதாந்தச் சொற்பொழிவுகளை நிகழ்த்தினார். அவருடைய வேதாந்தப் பணியின் சிறப்பின் காரணமாக, மேலைநாட்டு மக்கள் இந்து மதத்திலும் இந்தியப் பண்பாட்டிலும் ஆழ்ந்த மதிப்பு கொண்டார்கள்.

1897-ல் சுவாமி விவேகானந்தரின் கட்டளைக்கிணங்க அபேதானந்தர் அமெரிக்கா சென்று, நியூயார்க் வேதாந்த சங்கத்தின் தலைமைப்

பொறுப்பை ஏற்றுக்கொண்டார். அங்கு தமது குரு பக்தியாலும், விடா முயற்சியாலும் அனுபூதியாலும் பலவித இடையூறுகளையும் வென்று, வேதாந்தப் பணியைத் தலைசிறந்த முறையில்



சுவாமி அபேதானந்தர்

நடத்தி அபாரமான வெற்றி கண்டார். அமெரிக்காவில் அவருடைய சாதனைகளை வாசகர்கள் ஆங்கிலத்தில் விரிவாகப் படிக்கும்போது, பெரிதும் வியப்படைவார்கள் என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

வேதாந்த உண்மைகளைத் தற்கால விஞ்ஞான யுகத்திற்கு ஏற்ற வகையிலே எடுத்து விளக்கியவர் அபேதானந்தர். அவருடைய தவ அனுபூதியும் அறிவாற்றலும் சேர்ந்து, படித்த மக்கள் பலரும் வேதாந்தத்தில் ஈடுபாடுகொள்ளக் காரணமாக அமைந்தன.

சுவாமி அபேதானந்தரின் மேலைநாட்டு வாழ்க்கையின்போது, உலகப்புகழ்பெற்ற சிந்தனையாளர்கள் பலர் அவரோடு தொடர்பு கொண்டும் கலந்துரையாடியும் இருக்கிறார்கள். அவர்களுள் பேராசிரியர் மாக்ஸ்முல்லர், பேராசிரியர் பால்டியூஷன், ஹக்ஸ்லி, டின்டால், ஸ்பென்ஸர், டாக்டர் ஜேன்ஸ், காண்ட் ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள் ஆவர்.

யுகாவதார புருஷராகிய பகவான் ஸ்ரீராமகிருஷ்ணதேவர், உலகம் முழுவதுக்கும் ஏற்றதாகிய சமரச போதனைகளை அளித்துச் சென்றார். அவரது அருங்கருத்துகள் மேலைநாடுகளில் பரவக் காரணமாக இருந்தவர்களுள், சுவாமி விவேகானந்தருக்கு அடுத்ததாக அபேதானந்தரைத்தான் சொல்ல வேண்டும்.

'எனது சகோதரர் சுவாமி அபேதானந்தரின் மூலமாக எனது குரல் ஒலிக்கும். அதனை உலகம் கேட்கும்' என்று சுவாமி விவேகானந்தரே ஒரு சமயம் குறிப்பிட்டிருக்கிறார்.

சுவாமி விவேகானந்தர் தம்மிடம் ஒப்படைத்துச் சென்ற வேதாந்தப் பணியை, இருபத்தைந்து ஆண்டுகள் அபேதானந்தர் மேலைநாட்டில் தங்கியிருந்து கவனித்து வந்தார். இந்த இருபத்தைந்து ஆண்டுகளும் அவரது வரலாற்றிலே ஓயாமல் மிகக் கடுமையாக உழைத்து வேதாந்தப் பிரசாரத்தை மேற்கொண்டிருந்த ஆண்டுகளாக விளங்குகின்றன.

### தாயகம் திரும்பினர்

**1921**-ஆம் ஆண்டு சுவாமி அபேதானந்தர் தாயகம் திரும்பினர்.

பேலூர் மடம் திரும்பிய சில காலத்துக்குப் பிறகு அவர் 'இராமகிருஷ்ண வேதாந்த சங்கம்' என்னும் ஸ்தாபனத்தை நிறுவினர். வேதாந்தப் பிரசாரத்திற்காக 'விச்வவாணி' என்னும் பத்திரிகையையும் வங்க மொழியிலே துவக்கினர். இப்பத்திரிகை ஸ்ரீ ராமகிருஷ்ணரைக் குறித்தும் வேதாந்தத்தைக் குறித்தும், இப்போதும் வங்க மக்களிடையே உத்வேகத்துடன் பரப்பி வருகிறது.

ஆங்கிலத்தில் பல அரிய நூல்களை சுவாமி அபேதானந்தர் இயற்றியுள்ளார். அவை 'சுவாமி அபேதானந்தரின் பேருரைகள்' (The complete works of Swami Abhadananda) என்னும் பெயரில் பத்துத் தொகுதிகளாக வெளி வந்துள்ளன.

*1937*-ஆம் ஆண்டு பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண தேவரின் நூற்றாண்டு ஜயந்தி விழா கல்கத்தாவில் விமரிசையாக நடைபெற்றது. அதன் சார்பாக நடைபெற்ற சர்வ சமயப் பேரவையில் சுவாமி அபேதானந்தரும் ஒரு நாள் தலைமை வகித்து உரையாற்றினர்.

### அண்ணலுடன் ஐக்கியம்

**1939**-ஆம் ஆண்டு செப்டம்பர் 8-ஆம் நாள் சுவாமி அபேதானந்தர் மகாசமாதி அடைந்தார். எந்த ஸ்ரீ ராமகிருஷ்ணருக்காக காலமெல்லாம் சாதனை மயமான வாழ்க்கை வாழ்ந்தாரோ, அந்த ஸ்ரீ ராமகிருஷ்ணதேவரின் திருவடிகளிலேயே அபேதானந்தர் அடைக்கலம் புகுந்துவிட்டார்.

காசிப்பூர் பொது மயானத்தில் ஸ்ரீ ராம கிருஷ்ணரின் திருமேனி தகனம் செய்யப்பட்ட இடத்திற்குப் பக்கத்திலேயே, இரண்டு மூன்று அடி தூரத்தில் அபேதானந்தரின் திருமேனியும் தகனம் செய்யப்பட்டது. ஸ்ரீகுருதேவரின் சமாதி மண்டபத்திற்குப் பக்கத்திலேயே அவருடைய அருமைச் சீடருக்கும் சமாதி மண்டபம் எழுப்பப்பட்டிருக்கிறது. டில்லிக்கு ராஜாவானாலும் தாய்க்குப் பிள்ளைதானே? உலகின் பல பாகங்களுக்குச் செல்ல நேர்ந்த போதிலும், பல வெற்றிகளை அடுக்கடுக்காகக் குவித்த போதிலும், அபேதானந்தருக்கு நிலையான இருப்பிடம் ஸ்ரீ குருதேவரின் திருவடிகள் தாமே!



# ஆன்மிக உரையாடல்

**சுவாமி துரியானந்தர்**

**ஜுலை 29**

**சுவாமி துரியானந்தர்:** ''நீ ஏன் இறைவனை பிரத்தியக்ஷத்தில் உணராமல் போக வேண்டும்? நிச்சயமாக உணர்வாய். இல்லாதபட்சம் நீ ஏன் இங்கு வந்திருக்கவேண்டும்? அவனிடம் கதறு—அவனை அமைதி குலையும்படிச் செய். தலையை, (உன் ஆத்மாவின் வேதனையில்) அது உடைகிறவரை பூமியில் மோதிக் கொள். 'நீயே உள்நின்று ஆளுபவன். என்னுள் பார், அங்கே ஏதேனும் உள்ளதா என்று பார்' என அவனிடம் பேசு. இம்மாதிரி அவனிடம் பிரார்த்திப்பதற்கு ஒரு பயன் உண்டு.''

**ஜுலை 30**

**சுவாமி துரியானந்தர்:** ''ஒரு நாள் குருமகராஜ் (இறுதிக் காலத்தில் உற்ற) தொண்டை நோய் குறித்து இப்படிப் பேசினர். தொண்டை நோயின் பாதிப்பை அவர் உணருகிருரோ என்று எவரோ கேட்டபோது அவர் விடை சொன்னர்: 'நீ என்ன முட்டாள்தனமான விஷயம் பேசுகிருய்! சரீரம் என்பது எப்போதேனும் முனித்தன்மை எய்த முடியுமா? மனம் தான் அப்படி (தெய்விகத்தன்மை உள்ளதாக) ஆவது?' மனமானது பாதிப்புருமல் நிலைத்திருக்கும்படி செய்ய வேண்டுமேயன்றி, ஸ்பார்டா வீரர்கள் முரட்டுத்தனத்தைப் பெருக்கிக்கொண்டே எதையும் தாங்கப்பார்த்தது போலச் செய்வது அதிகம் பயன் தராது. இந்நிலையில் உனக்கு வலி தெரியத்தான் செய்யும்; ஆனல் அதை வெளிக்காட்டிக்கொள்ளாமல் அடக்கிக் கொள்வாய். அவ்வளவே. வலிகளும் துன்ப அவஸ்தைகளும் சரீரத்துடையவே; நிஜமான உன்னுடையவை அல்ல. நீ சரீரத்திலிருந்து பிறிதானவன் என்ற உணர்வைப் பெறும்போதுதான் சரியான வழியில் செல்கிருய்.

''வயோதிகமும் தள்ளாமையும் உன்னை ஆட்கொள்வதற்கு மிகவும் முன்னதாக உன் ஆத்ம சாதனைகளையெல்லாம் முடிக்க வேண்டும். 'வீடு தீப்பற்றி எரிய ஆரம்பித்தபின் கிணறு வெட்டத்தொடங்கிப் பயன் என்ன?'

''உணர்ச்சிகளை வெறுமே அடக்கி வைப்பது உதவாது. தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதோடு ஓர் உன்னத லட்சியமும் இருக்க வேண்டும். உயர்நோக்கமில்லாவிடில், உணர்ச்சி வேகங்கள் வெளிப்பட வேறொரு வடிகாலைத் தேடும். அவற்றுக்கு நீ ஒரு புது திருப்பம் தந்தாக வேண்டும். பிறகு நீ தன்னல் அவற்றினின்று விடுபடுவாய். 'என்னைச் சரண்புகுந்து, புலன்களைக் கட்டுப்பாடு செய்' (என்ருன் கண்ணன்). உதாரணமாக, காமம். நீ உன்னை அவனது குழந்தை என்று பாவித்துக்கொள். அப்போது நீ காம வசப்படுமளவுக்கு எப்படித் தாழ்நிலை அடைய முடியும்? அல்லது நீ நித்திய சுத்தன் என்ற பாவனையை வளர்த்துக் கொள்.

''தனது கால் பலத்திலேயே நிற்பது என்னும்போது, 'தான்' என்பது விசுவாகாரமான ஒரே தானைப் புரிந்து கொண்ட நிலையைக் குறிப்பதாகும். தான் இன்னர், இன்னின்ன பரீட்சைகளில் தேறியிருக்கிறவர் என்றெல்லாம் நினைத்துக் கொண்டிருக்கிறதே, இந்த தானைக் குறிப்பதல்ல. இதன் பலத்தில் நிற்பதில் ஒரு பயனும் இல்லை.

''கர்மத்தை ஒரு யக்ஞமாகக் கருத வேண்டும். யக்ஞத்தைச் செய்வது போலவே எந்த வேலையை எடுத்துக்கொண்டாலும் அதை முற்றவும் செவ்வனே புரிய வேண்டும். அந்த வேலையும் ஓர் ஆத்ம சாதனை, ஈச்வரா நுபவத்துக்கு ஒரு வழி என்று கருதவேண்டும். அப்போது தான் நன்னடத்தை அமையப்பெறும்.''

**சுவாமி சி:** ''தூங்கு முன் தியானம் தொடங்கி, தியானித்த வண்ணமே உறக்கத்தில் நழுவுவது மிகவும் நல்லதாகும். வ-க்கு மிகவும் ஆழ்ந்த தியானம் கைகூடுவது வழக்கம். ஆனால் குருமகராஜ் தொட்ட மாத்திரத்தில் அவர் குருமகராஜைப் பார்த்தபடி (வெளி) விழிப்புப் பெற்று விடுவார். நித்யகோபால் அடிக்கடி ஆழ்ந்த பரவச நிலைக்குப் போய் விடுவது வழக்கம். அவருடைய கண்கள் மேலே சுழலும். அவருடைய மார்பு நன்றாகச் சிவந்து விடும். தியானம் செய்யும்போது அவருடைய ரத்தமெல்லாம் முகத்துக்கே குபீரென ஏறி, முகம் செக்கச் செவேல் என்றாகி விடும். ''இவ்வளவு வேண்டாமப்பா, இவ்வளவு வேண்டாம். சாதாரண மனிதர்களுக்குரிய வழிகளிலேயே நீயும் செல்ல வேண்டும்' என்று குருமகராஜ் அவரிடம் சொல்வார்.''

**சுவாமி துரியானந்தர்:** ''நான் என் இதய அந்தரங்கத்திலிருந்து சொல்கிறேன். எது எப்படி ஆகும் என்பதைச் சற்றும் பொருட்படுத்தாமல் எல்லாவற்றையும் விட்டுவிட்டு, இப்போது நான் இருக்கிறபடியே, இந்தக் கணத்திலேயே போய்விட என்னால் முடியும். இன்றே, இப்போதே பிக்ஷை எடுத்து வாழ என்னால் முடியும். இந்த உறுதிப்பாடு இல்லாவிடில், நான் நாசமானவன்தான்.

''மனிதன் எப்போதும் சுய ஆதாயத்தையே தேடுபவன். அவன் இதை இந்த ஜன்மத்தில் மட்டும் செய்யவில்லை; பல பூர்வ ஜன்மங்களில் இப்படியே செய்து வந்திருக்கிறான். இவ்வாறு தன்னலம் தேடுவதை விடுவதே முக்தி-வேறெதுவும் அல்ல. துன்பத்தைத் தவிர்க்க மனிதன் விரும்புகிறான்; தன்னைமட்டும் மற்றவற்றிலிருந்து பிரித்துத் தனியாகப் பேணிக்கொள்கிறான். 'மனிதனுக்கு வம்பு பேசத்தான் பிடிக்கிறது' என்று சுவாமிஜி கூறுவது வழக்கம்.

''இந்த (சன்னியாச) வாழ்க்கை என்பது வேடிக்கையல்ல. அதை ஒருவன் வெகு ஜாக்கிரதையுடன் வாழ்ந்தாக வேண்டும். அவன் மிகவும் உன்னிப்பாகவும் உஷாராகவும் இருக்க வேண்டும். பதிலடி கொடுக்கவே கூடாது; எப்போதும் பொறுத்துத் தாங்கிக்கொள்ள வேண்டும். நீ பதிலடி தந்தாயானால் அது மறுபடி உன் மீதே திரும்பித்தான் தீரும். இது குழந்தை விளையாட்டல்ல. எல்லா வாழ்க்கைக்கும் அப்பாலே போகும் முயற்சிதான் சன்னியாசியின் வாழ்க்கை. நல்ல சிந்தனைகளிலேயே அனவரதமும் ஈடுபட்டிருப்பவன் மட்டுமே காக்கப்படுவான்.''



வரப்பிரசாதங்கள் எல்லாவற்றிலும் தலைசிறந்தது மதம்; அகிம்சை, புலனடக்கம், தவம் ஆகியவைகளைக் கொண்டதுதான் மதம்.

**—நாஸ்வைகலிக சூத்திரம்**

புத்திசாலியான ஒருவன் தனக்குச் சம்பந்தம் இல்லாததை ஒதுக்கிவிட வேண்டும்.

**—பஞ்சதந்திரம்**

கலங்காத உள்ளம் படைத்தவர்களே கடைசியில் வெற்றிக்கு உரியவர்கள்.

**—ஓர் அறிஞர்**

துய்க்கத் துய்க்கத் தேயாத இன்பம், பிறருக்கு நன்மை செய்வதால் உண்டாகும் இன்பம் ஒன்றே.

**—கன்பூஷியஸ்**

இதயமே கடவுள் கோயில். ஆகையால் இதயத்தைப் பாழ் செய்யாதே.

**—ஷிண்டோ (ஜப்பான்)**

இதயத்தில் அமைதி உண்டாவதே இன்பம். இதய நிறைவு இல்லாமையே துன்பம்.

**—தாவோ (சீனம்)**

# இறை வழிபாடு

திருமுருக கிருபானந்தவாரியார்

எங்கும் நிறைந்தவன் இறைவன். இறை என்ற சொல் 'இறு' என்ற பகுதி அடியாகப் பிறந்தது. சரம் அசரம் என்ற எல்லாப் பொருள்களிலும் தங்கியிருப்பவன் இறைவன்.

"பார்க்குமிடம் எங்கும் ஒரு நீக்கமற
நிறைகின்ற பரிபூரணனந்தமே''
"அங்கிங்கெனுதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்தபூர்த்தியாகி அருளொடு நிறைந்தது''

உடம்பிலே உயிரும், உயிரிலே இறையும் தங்கி யிருக்கின்றன. உதை பந்து: 'பந்துக்குள் பிளாடர்' அதற்குள் காற்று என்பது போல் எல்லாப் பொருள்களையும், எல்லா உயிர்களையும் இயக்குகின்றதனுல் அப்பரம்பொருள் இயவுள் எனப் பேர் பெற்றது. ''பெரும்பெயர் இயவுள்'' என்பார் நக்கீரர். எல்லாவற்றையும் கடவுவதனுல் கடவுள் எனவும் பேர் பெற்றது.

ஒரு மருத்துவ மனையில் மருத்துவர் தங்கியிருப்பதன் நோக்கம், அம்மருத்துவ மனையில் உள்ள பிணியாளர்களின் பிணிகளைப் போக்குவதே ஆகும். அதுபோல, இறைவன் எல்லா உயிர்களிலும் தங்கி அவ்வுயிர்களின் பிறவிப் பிணியைப் போக்குகின்றனன்.

"உள்ளொடு புறங்கீழ் மேலாய்
உயிர்தொறும் ஒளித்து நின்ற கள்வன்''
என்பார் பரஞ்சோதி முனிவர்.

இவ்விதம் இறைவன் எங்கும் இருப்பினும் ஞானிகள் திருவுள்ளத்திலும், திருக்கோயில்களிலும் சிறப்பாக விளங்கித் தோன்றுகிருன். ஏனைய இடங்களில் இறைவன் மறைந்திருக்கிருன்.

" ஓராதார் உள்ளத்துள் ஒளிக்கும் ஒளியானே''
—மாணிக்கவாசகர்.

பாலில் நெய் மறைந்திருப்பது போல பிற இடங்களில் இறைவன் நிறைந்து மறைந்திருக்கிருன். கடைந்த தயிரில் வெண்ணெய் திரண்டு உருண்டு வெளிப்பட்டிருப்பது போல ஞானிகள் உள்ளத்திலும் திருக்கோயிலிலும் இறைவன் விளங்கிக் காட்சியளிக்கிருன்.

மற்ற இடங்களில் இறைவனை நினைந்து தியானிப்பதனுலும், துதிப்பதனுலும் வழிபடுவதினுலும் வினைகள் வெதும்புகின்றன. கோயிலில் இறைவனை வழிபட்டால், வினைகள் வெந்து எரிந்து, கரிந்து நீருகி விடுகின்றன.

கொடிய வெய்யிலில் ஒரு துணியை வைத்தால் அந்தத் துணி வெதும்புமேயன்றி வெந்து சாம்பராகாது. சூரியகாந்தக் கண்ணுடியை வெய்யிலில் வைத்து அதன்கீழ் வரும் வெய்யிலில் துணியை வைத்தவுடனே அத்துணி சாம்பராகி விடுகிறது. நேர் வெய்யிலுக்கு இல்லாத ஆற்றல், சூரியகாந்தக் கண்ணுடியின் கீழே வருகின்ற வெய்யிலுக்கு உண்டு.

பரந்து விரிந்து இருக்கிற கதிரவனுடைய வெப்பத்தை ஒன்றுபடுத்தி தன் கீழே சூரிய காந்தக் கண்ணுடி பாய்ச்சுகிறது. பிற இடங்களில் இறைவனை வழிபடுவது, வெய்யிலில் வேட்டியை வைப்பது போலாகும். திருக்கோயிலில் இறைவனை வழிபடுவது சூரியகாந்தக் கண்ணுடியின் கீழ் வைப்பது போலாகும். ஆதலால் திருக்கோயிலில் வழிபாடு இன்றியமையாததாகும்.

திருக்கோயில்களிலுள்ள திருவுருவங்கள், தேவர்களாலும், முனிவர்களாலும், நால்வர், ஆழ்வார்கள் ஆகிய ஆன்ருேர்களாலும் நிறுவப்பெற்ற காரணத்தால் அவை மேன்மை பெற்று, வழிபடுவோருடைய வல்வினைகளை அகற்றி வேண்டிய வரங்களை வழங்கி அருள் புரிகின்றன.

பசுவின் உடல் முழுவதும் பால் பரவியிருப்பினும் மடியின் மூலமாக அதனைப் பெறுவது போல, எங்கும் நிறைந்திருக்கிற இறைவனுடைய திருவருளைத் திருக்கோயில்களில் உள்ள திருவுருவங்கள் மூலமாக நாம் பெறுதல் வேண்டும்.

ஒரு பறவை இரு சிறகுகளைக் கொண்டு பறப்பது போல், இறை வழிபாட்டிற்குப் பூவும் நீரும் வேண்டப்படுகின்றன.

"புண்ணியம் செய்வார்க்குப் பூவுண்டு நீருண்டு
அண்ணல் அதுகண்டு அருள்புரியா நிற்கும்''
என்பது திருமந்திரம். எங்கும் நிறைந்த இறைவனை, எங்கும் எளிதாகக் கிடைக்கக்கூடிய பூவினுலும், நீரினுலும் நாம் வழிபட வேண்டும். வழிபாட்டிற்கு அன்பும், ஆசாரமும் இரண்டு கண்கள் போன்றவை.

திருக்கயிலாய மலையில் பார்வதி பரமேச்வரர் மீது விளையாட்டாக வில்வக் கிளையை உதிர்த்த குரங்கு, அபுத்தி பூர்வமாகச் செய்த அச் சிவ புண்ணியத்தால் பூவுலகிற் பிறந்து, முசுகுந்தச் சக்கரவர்த்தி என்ற பெயருடன் மூவுலகும் ஆண்டது.

இறை வழிபாடு செய்து மார்க்கண்டேயர், மறலியை வென்ற வரலாறு உலகம் அறிந்த ஒன்று.

ஆத்மஜோதியில் அருட்ஜோதி சூழச் சிவ ஜோதி விளங்குகின்றது.

ஆத்மஜோதி—வட்டமாகிய கல்
அருட்ஜோதி—சூழ்ந்திருக்கின்ற ஆவுடையார்.
சிவஜோதி—மேல் நோக்கிய இலிங்கம்
இதுதான் சிவலிங்கத்தின் உண்மை.
''ஜோதியுள் ஜோதியுள் ஜோதி''

என்பார் இராமலிங்க அடிகளார்.

கோயில் ஐந்து பிரகாரங்களோடு கூடியது. இந்த உடம்பே இறைவன் இருக்கிற திருக்கோயில். இந்த உடம்பும் **அன்னமய கோசம்**, பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞானமய கோசம், ஆனந்த மய கோசம் என்ற பஞ்சகோசங்களை உடையது.

உடம்பில் 32 கட்டுக்களோடு கூடிய முதுகுத் தண்டே திருக்கோயிலில் கொடிமரமாகக் காட்சியளிக்கிறது. கொடி மரத்தில் கொடி ஏறியவுடன் இறைவன் வெளியே வந்து காட்சியளிக்கிறான். அதுபோல், முதுகெலும்பாகிய வீணைதண்டத்தில் வளைந்து செல்லுகிற சுழுமுனை என்ற வெள்ளை நரம்பின் வழியாகப் பிராணவாயு ஆறுதாரங்களையும் கடந்து, பிரமரந்திரத்தைத் தாண்டி சகஸ்ரார வெளியிலே சென்றவுடன் சிவஜோதி காணப்படும்.

திருக்கோயிலில் விளங்கும் பத்திர இலிங்கமாகிய பலிபீடம் பாசத்தையும் நந்தி தேவர் பசுவையும், சிவலிங்கம் பதியையும் குறிப்பிடுகின்றன.

நமது சரீரத்தில் உள்ள மூலாதாரமும், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அநாகதம் விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்களையும் கோயிலில் உள்ள யாக மண்டபம், அலங்கார மண்டபம், கல்யாண மண்டபம், நிருத்த மண்டபம், மகா மண்டபம், அர்த்த மண்டபம் என்ற மண்டபங்கள் தெரிவிக்கின்றன. எனவே, திருக்கோயிலில் சென்று இறைவனை வழிபட்டு அங்கே கண்ட பரம்பொருளை நம் உடம்புக்குள்ளேயும் கண்டு மனோலயம் பெற வேண்டும்.

கட்டையில் கனல் மறைந்திருக்கிறது. கட்டையைக் கடைந்தவுடன், அதில் மறைந்த கனல் வெளிப்பட்டுக் கட்டை கனலாகக் காட்சியளிப்பது போல, உயிரில் ஒளிந்திருக்கின்ற இறைவனை ஞானத்தால் கடைவோமாயின், சிவம் வெளிப்பட்டுச் சீவனைச் சிவமாக்கிக் கொள்ளுகிறது.

எண்ணில் காலமாக எண்ணில்லாத உடம்பு எடுத்து வருகிற நாம், இறைவனை மெய்யன்புடன் உள்ளம் குழைந்து உருகி மலரிட்டு அருச்சனை செய்து வழிபட்டால் பிறவி நோய் தீரும்.

### தெய்வம் ஒன்று

திருக்கோயில்களில் சிவலிங்கம், தட்சிணா மூர்த்தி, நடராஜர், சந்திரசேகர், அம்பிகை, விநாயகர், முருகர், திருமால் என்ற பல மூர்த்திகள் இருப்பினும், அவைகள் அனைத்தும் ஒரே மூர்த்திதான்.

நெருப்பு—சிவபெருமான்
நெருப்பில் உள்ள சூடு—அம்பிகை
நெருப்பில் உள்ள செம்மை நிறம்—விநாயகர்
நெருப்பில் உள்ள ஒளி—முருகவேள்
''சுடரோ சிவபெருமான் சூடுபரா சக்தி
திடமார் கணநாதன் செம்மை—படரொளியோ
கந்தவே ளாகும் கருதுங்கால் சற்றேனும்
வந்ததோ பேத வழக்கு''

மலர்—சிவபெருமான்
மலரின் வடிவம்—அம்பிகை
மலரின் நிறம்—கணபதி
மலரின் மணம்—மயிலவன்
நூல்—சிவபெருமான்
நூலின் அகலம்—பார்வதி
நூலின் நீளம்—கணேசர்
நூலின் கனம்—குமாரக் கடவுள்
சிவபெருமானுடைய சக்திகள் நான்கு:—

அவை அருள் சக்தி, போர்சக்தி, கோப சக்தி, புருஷ சக்தி எனப்படும்.

அருள் சக்தி—பார்வதி
போர் சக்தி—காளி
கோப சக்தி—துர்க்கை
புருஷ சக்தி—விஷ்ணு

''அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனார்க்கே'' என்பது அப்பர் வாக்கு.

முக்கண்ணன்—முக்கண்ணி
சங்கரன்—சங்கரி
திரிபுரசுந்தரன்—திரிபுரசுந்தரி

என்பது போல, அரன்—அரி என்று வந்தது. ஆகவே திருமாலின் வழிபாடும் அம்பிகையின் வழிபாடும் ஒன்றென உணர்க.

திருக்கோயில்களில் காட்சியளிக்கும் துவார பாலகர்களில் ஒருவர் ஆள்காட்டு விரலைக் காட்டி நிற்பது, உள்ளே வழிபடச் செல்வோருக்குக் கடவுள் ஒன்றே என்பதை அறிவுறுத்துகிறது.

மற்றொரு துவார பாலகர் ஒரு கையை விரித்துக் காட்டுவது, கடவுள் ஒன்றைத் தவிர வேறொன்றில்லை என்பதை உணர்த்துகிறது.. இதையே 'ஏகம் ஏவ அத்விதியம் ப்ரம்மம்' என்று வேதம் கூறுகிறது. கடவுள் ஒன்றேதான்; இரண்டாவது இல்லை என்பது இதன் பொருள்.

எனவே, தெய்வ வழிபாடு செய்வோர் தெய்வ பேதம், மூர்த்தி பேதம் குறித்து மாறுபட்டு மலையாது நிலையாய அன்புடன் ஒரு பொருளைத் தியானித்து வழிபட வேண்டும்.

ஒரு காகிதத்திற்கு இரண்டு பக்கங்கள் இருப்பதுபோல, தெய்வத்திற்கும் இரண்டு பக்கங்கள் உண்டு. ஒன்று தட்பம்; மற்றொன்று வெப்பம். வெப்பமும் தட்பமும் சமமாக இருந்தால் தான் மலர் மலராகக் காட்சியளிக்கும். வெப்பம் மிகுந்தால் மலர் வாடும்; தட்பம் மிகுந்தால் மலர் அழுகும்.

இந்த உடம்பும் சீதோஷ்ணத்தால் தான் வாழ்கிறது. ஒரு சமயம் இந்த உடம்பில் சூடு குறையுமானால் சுற்றத்தார் சூழ்ந்து கொள்வார்கள். மருத்துவர் வந்து TOO LATE என்று கூறி 'அவர் விரும்பியதெல்லாம் கொடுங்கள்' என்று சொல்லுவார். ஆகவே, உலகிற்கு வெப்பமும் தட்பமும் இன்றியமையாதவை. வெப்பத்தின் நுண்மை சிவம். தட்பத்தின் நுண்மை திருமால். வெப்பத்தின் நிறம் சிவப்பு, தட்பத்தின் நிறம் பச்சை. எனவே, சிவமூர்த்தி பவளம் போல மேனியன். திருமால் பச்சைமா மலை போல் மேனியன். சிவம் அனல் ஏந்தி விளையாடுகிறது. திருமால் ஆழியிடைத் துயிலுகிறார். சிவாலயத்தில் வெந்த நீற்றையும், விஷ்ணு கோயிலில் தீர்த்தப் பிரசாதத்தையும் வழங்குகிறார்கள்.

பாதி சிவம், பாதி விஷ்ணு. இந்தத் தத்துவத்தைச் சிவமூர்த்தங்கள் இருபத்து ஐந்தனுள் கேசவார்த்த மூர்த்தம் என்பது தெரிவிக்கிறது. சங்கரநாராயணர் கோவிலும் இதற்குச் சான்று.

''தாழ்சடையும் நீள்முடியும் ஒண்மழுவும் சக்கரமும்
சூழரவும் பொன்நாணும் தோன்றுமால்— வீழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்
கிரண்டுருவும் ஒன்றாய் இசைந்து''

என்று ஆழ்வார் கூறுகிறார்.

சிதம்பரம், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருக்குற்றாலம், திருவருணை முதலிய திருத்தலங்களில் உள்ள சிவாலயங்களில் திருமாலும் காட்சி தருகிறார்.

(தொடரும்)



நாம் வீணாகக் கழிக்கும் ஒவ்வொரு விநாடியும் நம் வாழ்வில் மீண்டும் பெறவே முடியாத பெருஞ் செல்வமாகும்.

—ஓர் அறிஞர்

பரம்பொருளே! உனக்கும் எனக்கும் இடையில் 'நான்', 'நீ' என்ற பேதம் மறையும் நாள் எந்நாளோ?

—பிஸ்தாமி (மகம்மதிய ஞானி)

இறைவனுடைய பெருமையைப் புகழாமல் பிறருடைய பெருமைகளை அலங்காரமாகப் பேசுவோர், தூய பசும்பால் அருந்துவதை விட்டுவிட்டு நாய்ப்பாலை அருந்துவோர்க்கு நிகர் ஆவர்.

—வள்ளலார்

# இப்படி ஒரு வாழ்க்கை

**விவேகானந்ததாசன்**

ஒரு காலத்திலே ஒரு இளம் சன்னியாசி வாழ்ந்து வந்தார்.

ஆரவாரம், ஆடம்பரம் ஆகியவைகள் அந்த சன்னியாசிக்கு அறவே பிடிக்காது. ஏனென்ருல், இவைகளால் ஒருவன் கடவுளை அடையவே முடியாது என்பதை அவர் தெளிவாக உணர்ந்திருந்தார். உலகப்பற்றுள்ள மக்களுடன் பழக நேர்ந்தபோதெல்லாம், எவ்வளவு தேவையோ அவ்வளவுக்கு மட்டுமே குறைவாக அவர் பழகினர். வீணுன உலக விவகாரங்களில் தலையிடுவதை அறவே அவர் தவிர்த்து வாழ்ந்தார்.

அதற்கு ஒரு காரணம் இருந்தது. அதாவது கடவுளை நினைத்து வாழ்வதை விட, எவ்வளவுதான் புகழையும் பணத்தையும் தருவதாக இருந்தாலும், எவ்வளவு பெரிய மனிதர்களின் பழக்கமானுலும், அவ்வளவு முயற்சிகளும் வீண்! வீண்! வீண்! இதை அவர் புரிந்து கொண்டிருந்தார். ஆகவே, எளிமையும் தெய்வ பக்தியும் கூடிய ஒரு சன்னியாசியின் வாழ்க்கையாக தமது வாழ்க்கையை அவர் அமைத்து வாழ்ந்தார்.

அவர் தம்முடைய பிரார்த்தனையின்போது 'உலகிலுள்ள எல்லா உயிர்களும் நலமாக வாழவேண்டும்' என்று பிரார்த்திப்பது வழக்கம். ஆனுல் நேரிடையாக அவர் மக்களுடன் அதிகம் பழகாமல் ஒரு மலைச்சாரலில் ஒதுங்கியே வாழ்ந்தார்.

மலைச்சாரலில் தங்கி, கடுமையான ஆத்ம சாதனங்களை அவர் பழகினர். தனிமையில் இருந்து ஆண்டவனைப் பிரார்த்திப்பதில் அவருக்கு விருப்பம் அதிகம்.

நாளடைவில் அவர் அபார ஞானமுதிர்ச்சியைப் பெற்று ஒரு மகானின் நிலையை அடைந்தார்.

### தேவர்கள் வந்தார்கள்

ஒரு சாதாரண மனிதன், இந்த அளவுக்கு ஞான முதிர்ச்சியைப் பெற்றிருக்கிருர் என்பது தேவர்களுக்குத் தெரிய வந்தது. அது அவர்களுக்கே ஆச்சரியத்தைத் தந்தது. அதுமட்டும் இல்லாமல் 'அந்த மகானை நாமும் நேரில் சென்று பார்க்க வேண்டும். அவருக்குச் சில அபூர்வமான சித்திகளைத் தர வேண்டும்-' என்றும் தேவர்கள் விரும்பினுர்கள்.

ஆகவே ஒரு நாள் தேவர்கள் அனைவரும் தேவலோகத்தில் இருந்து பூலோகத்திற்கு வந்தார்கள். அந்தச் சன்னியாசி தங்கியிருந்த மலைச்சாரலை அடைந்தார்கள்.

மகான் தேவர்களை அன்புடன் வரவேற்ருர். தேவர்களுக்கும் அவரைப் பார்த்ததில் எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது. தேவர்கள் 'பெரியவரே! உங்களுடைய பரிசுத்தமான வாழ்க்கையை மனதார நாங்கள் பாராட்டுகிருேம். உங்

களுக்கு அபூர்வமான சில சித்திகளைத் தர விரும்புகிறோம். உங்களுக்கு எப்படிப் பட்ட சித்திகள் வேண்டும் என்று சொல்லுங்கள். நாங்கள் அவைகளை மகிழ்ச்சி யோடு உங்களுக்குத் தரக் காத்திருக்கிறோம்' என்று சொன்னார்கள்.

அந்தச் சன்னியாசி காது கேட்காதவரைப் போல இருந்தார். அவர் பதிலே பேசவில்லை. மௌனமாக மட்டுமே இருந்தார்.

தேவலோகத்திலிருந்து சன்னியாசியைப் பார்க்க வந்தவர்கள், அவர் சும்மா இருக்கிறார் என்பதற்காக அவரை விட்டுவிடுவார்களா?

தேவர்கள் 'பெரியவரே, நோயாளிகளை நீங்கள் தொட்ட மாத்திரத்தி லேயே குணப்படுத்தும் சித்தியை உங்களுக்குத் தரட்டுமா? அதைக்கொண்டு உலக மக்களுக்கு ஏராளமான நன்மைகளைச் செய்யலாம்' என்று சொன்னார்கள்.

அதற்குப் புன்முறுவல் பூத்தபடி சன்னியாசி பதில் சொன்னார்: ''நீங்கள் என்மீது கொண்டுள்ள அன்புக்கு மிகுந்த நன்றி. ஆனால் எனக்கு சித்திகள் எதுவும் வேண்டவே வேண்டாம். அப்படி சித்தி என்ற ஒன்றை எனக்குக் கொடுத்து, என் மீது சுமையை ஏற்றி விடாதீர்கள். எந்த பகவான் உலகில் உள்ள ஜீவராசிகளையும் மக்களையும் படைத்தாரோ, அவரே நோயாளிகளைக் குணப்படுத்தும் பணியையும் கவனித்துக் கொள்வார். அவரே அதைச் செய்யட்டும்.''

தேவர்கள் இப்படிப்பட்ட ஒரு சன்னியாசிக்கு அவசியம் நாம் ஏதாவது சித்திகள் தர வேண்டும் என்று உள்ளபடியே மனதார விரும்பினார்கள்.

ஆகவே திரும்பவும் அவர்கள் 'நீங்கள் ஒரேயடியாக அப்படி சொல்லக் கூடாது. பாவம் செய்த மக்களைப் புனித வாழ்க்கையை மேற்கொள்ளச் செய்யும் சித்தியை உங்களுக்குத் தருகிறோம். தயவு செய்து பெற்றுக்கொள்ளுங்கள்' என்று சன்னியாசியிடம் சொன்னார்கள்.

'வேண்டாம். சித்தி எதுவாக இருந்தாலும், அது தயவு செய்வது ஆகாது. மேலும் நீங்கள் குறிப்பிடும் வேலையை தேவர்களாகிய நீங்கள்தான் செய்து வரு கிறீர்களே! எனக்கு அந்த சித்தி வேண்டாம். எனக்கு அதைப் பெறும் விருப்பமே இல்லை' என்று தீர்மானமாக சன்னியாசி பதில் சொல்லிவிட்டார்.

'உலகம் முழுவதும் உங்களைப் போற்றிப் புகழும்படி செய்கிறோம். அதை யாவது நீங்கள் ஏற்றுக்கொள்ளுங்கள்' என்று தேவர்கள் மீண்டும் தெரிவித்துக் கொண்டார்கள்.

சன்னியாசி அதற்கும் சம்மதிக்கவில்லை. 'வேண்டாம். என்னை விட்டு விடுங்கள். சித்திகள் தரும் விஷயத்தில் என்னைக் கட்டாயப்படுத்தாதீர்கள். நீங்கள் சொல்வதைப் போல மக்கள் என்மீது ஈடுபாடு கொண்டு போற்றிப் புகழ ஆரம் பித்தால், யாரை நினைப்பதற்காக மனித வாழ்க்கை ஏற்பட்டிருக்கிறதோ அந்தக் கடவுளையே மறந்து போய்விடுவார்கள். அதைவிடவும் பெரிய தீமை உலகிலேயே கிடையாது. என்னை அந்த நிலையில் வைத்து விடாதீர்கள் என்று மன்றாடி உங் களைக் கேட்டுக்கொள்கிறேன்' என்றார்.

இதைக் கேட்ட தேவர்கள் அனைவருமே 'பிறகு உங்களுக்கு என்னதான் வேண்டும் என்று நீங்களே சொல்லுங்கள்' என்று ஒரே குரலில் கூவினார்கள்.

சன்னியாசி ஒரு குழந்தையைப் போல சிரித்துக்கொண்டே 'அதுதான் எனக்கும் தெரியவில்லை' என்று சொன்னார். ஆனால் அவருடைய குரலிலே ஒருவித உறுதியும் தீர்மானமும் தொனித்தது.

தேவர்கள் விட்டுவிடுவதாக இல்லை. 'எங்களுடைய மகிழ்ச்சிக்காகிலும் எதையாவது கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள். அப்போதுதான் எங்களுக்குத் திருப்தி ஏற்படும்' என்று மன்றாடுவதைப் போல சன்னியாசியிடம் வேண்டினார்கள்.

'சரி. அப்படியானால் இடைவிடாமல் சதாசர்வ காலமும் கடவுளின் கிருபை எனக்குக் கிடைக்க அருள் செய்யுங்கள். வாழ்க்கையில் எனக்கு அது ஒன்று மட்டும் இருந்தால் போதும்' என்று துறவி பணிவாகக் கேட்டுக்கொண்டார்.

சன்னியாசியினுடைய பணிவு, வைராக்கியம் ஆகியவைகளைக் கண்ட தேவர்களுக்கு வியப்பும் மகிழ்ச்சியும் ஏற்பட்டன.

அவர்கள் 'கடவுளின் கிருபையைத்தான் நீங்கள் ஏற்கனவே தாராள மாக, ஏன், பரிபூரணமாகவே பெற்றிருக்கிறீர்களே! எங்களுக்காக வேறு ஏதா வது ஒரு சித்தியைக் கேட்டுப் பெற்றுக்கொள்ளுங்கள். நீங்கள் எங்களிடமிருந்து ஏதாவது ஒரு சித்தியைக் கேட்டுப் பெற்றுக்கொள்ளத்தான் வேண்டும். இது எங்கள் பிரார்த்தனை' என்று ஏகோபித்த குரலில் தேவர்கள் அனைவருமாகச் சேர்ந்து சொன்னார்கள். அவர்களுடைய குரலே தெய்வத்தின் சன்னதியில் பிரார்த் திப்பது போலவும் யாசிப்பது போலவும் இருந்தது.

முனிவர் சில வினாடிகள் யோசித்தார்: 'சரி. எனக்கே தெரியாமல் நான் உலக மக்களுக்கு நன்மைகளைச் செய்யும்படி செய்யுங்கள்' என்று கேட்டுக்கொண் டார்.

## தேவர்கள் செய்த முடிவு

தேவர்கள், சன்னியாசி இருந்த இடத்திலிருந்து சற்று தூரம் ஒதுங்கிச் சென்று தங்களுக்குள்ளாகவே ஒன்றுகூடி ஆலோசித்தார்கள். ரிஷியின் மனநிலைக்கு ஏற்பவும் அவரது உள்ளத்தைப் புண்படுத்தாமலும், அவருக்கு ஒரு வரம் தர முடிவு செய்தார்கள். ஆனால் அப்படிப்பட்ட ஒரு சித்தி தரப்போவதைச் சன்னி யாசிக்கே தெரிவிக்காமல் இருப்பது என்று அவர்கள் முடிவு செய்து கொண் டார்கள்.

பிறகு சன்னியாசியின் முன்னிலையில் தேவர்கள் திரும்பி வந்து 'இந்த நிமிடம் முதற்கொண்டு உங்களுடைய நிழல்பட்ட மாத்திரத்திலேயே நோய், துன்பம், பாவம் ஆகியவைகள் பறந்தோடி விடுவதாகுக! ஆனால் இப்படி ஒரு சித்தியை நீங்கள் பெற்றிருப்பது உங்களுக்கே தெரியாமல் இருப்பதாகுக' என்று மனதால் சங்கல்பித்தார்கள்.

பிறகு, தேவர்கள் அனைவரும் மகரிஷியிடம் விடைபெற்றுக்கொண்டு தேவலோகம் திரும்பினார்கள். தேவர்கள், தனக்குக் கொடுத்துச் சென்ற சித்தியைப் பற்றி மகரிஷிக்கு ஒன்றுமே தெரியாது.

அதன்பிறகு அந்த சன்னியாசி நடந்து சென்ற இடமெல்லாம், அவர் நிழல்பட்ட மாத்திரத்திலேயே காய்ந்த செடி கொடிகள் துளிர்த்தன. வறண்ட நீர் ஊற்றுகள் சுரக்க ஆரம்பித்தன. தரிசு நிலங்கள் செழித்தன. துன்புற்றவர்கள் மன அமைதி பெற்றார்கள். நோயாளிகள் தங்களை வருத்தும் பிணி நீங்கிக் குணம் அடைந்தார்கள். இவ்விதம் அவரது சாந்நித்ய விசேஷம் விரும்பத்தக்க பல நல்ல மாற்றங்களை உண்டுபண்ணியது.

ஆனால் இத்தகைய மாறுதல்கள், தேவர்கள் தனக்குத் தந்த சித்தியின் காரணமாகத்தான் ஏற்படுகின்றன என்பது அந்த சன்னியாசிக்குத் தெரியவே தெரியாது. மாறுதல்கள் நிகழ்வதைத் தம் கண் முன்னாலேயே அவர் பார்க்க நேர்ந்தபோதும், அவைகளை அவர் கொஞ்சமும் பொருட்படுத்தாமல் கவனிக்காதவரைப் போலவே இருந்து வந்தார்.

அவர் எப்போதும் போலவே மக்களுடன் பேசாமல் வீதியில் செல்வார். அவராக எதுவும் பேசமாட்டார். ஆனால் மக்கள் அபூர்வமாகத் தாமாக முன் வந்து ஏதாவது கேட்டால் அன்பு ததும்ப அவர்களுக்குப் பதில் சொல்லுவார். மக்களும் அவரிடம், அவருக்கு சித்தி இருப்பதைப் பற்றி சொன்னது கிடையாது.

தன்னொளி பரப்பும் நிலவு போலவும், நறுமணம் கமழும் மலர் போலவும், கைமாறு கருதாத மேகவும் போலவும் பூவுலகில் வாழும் பரமஹம்சர் ஒருவரின் வாழ்க்கையாக அவரது வாழ்க்கை அமைந்தது. அவரைப் பார்த்தபோதும் நினைத்தபோதும் மக்கள் அவரை மனதிற்குள்ளாகவே போற்றித் துதித்தார்கள். அவரோ எளிமையும் அமைதியும் கூடிய தமது வாழ்க்கையைத் தொடர்ந்து கொண்டிருந்தார்.

கதையில் சொல்லப்பட்ட சன்னியாசியின் வைராக்கியமும் வாழ்க்கை முறையும், பக்தி வாழ்க்கையில் ஈடுபடுபவர்களில் ஒருசாராருக்கு நல்ல ஒரு படிப்பினையாக விளங்கும்.



குழந்தைகள் மனப்பான்மை உடையவர்களுக்கே கடவுளரசு உரியது.

—ஏசுநாதர்

ஏமாற்றத்துடன் ஒரு வீட்டிலிருந்து வெளியேறும் விருந்தாளி, தன்னுடைய பாவங்களை எல்லாம் அந்த வீட்டில் போட்டுவிட்டு, வீட்டுக்காரனின் புண்ணியங்களை எல்லாம் தன்னுடன் எடுத்துச் சென்று விடுகிறான்.

—ஹிதோபதேசம்

கேவலம் உபநிஷத் வாக்கியங்களை அத்தியயனம் செய்து உண்டாகும் அர்த்த ஞானம் எல்லோருக்கும் கிடைக்கக்கூடும். அவர்கள் எல்லோரும் பரவித்தையை அறிந்தவர்களாக மாட்டார்கள். வேதத்தினாலும், குரு உபாசனையாலும் வைராக்கியத்தாலும் உண்டாகிற பிரம்மசாட்சாத்காரமே பரவித்தையாகும்.

—ஆதிசங்கரர்

# நம்மால் முடியுமா?

வாகீசகலாநிதி கி. வா. ஜகந்நாதன்

மிகவும் அன்புடையவர்களிடத்தில் உள்ள பழக்கங்களை நாம் நன்கு அறிவோம். அந்தப் பழக்கங்கள் எல்லாம் நமக்குப் பிடித்தவை என்று சொல்ல முடியாது. நம்முடைய அன்புக்கு உரியவர் மிகப்பெரியவராக, மதிப்புக்கு உரியவராக இருந்தால், அவருடைய குணங்களையோ, பழக்க வழக்கங்களையோ நாம் குறை கண்டு பேசுவதில்லை; என்றாலும் ஏதேனும் ஒரு செயல் நம் மனதுக்குப் பொருத்தமாகத் தோன்றாமல் இருக்கும். அந்தச் செயலுக்கு உரிய காரணம் ஏதாவது இருக்கலாம். அது நமக்குத் தெரியாது. ஆயினும் அந்தக் காரியத்தை அந்தப் பெரியவர் செய்யாமல் இருந்தால் நன்றாக இருக்கும் என்று தோன்றுகிறது. அதை எப்படி அவர் செய்யாமல் தடுப்பது? அவரோ மதிப்புக்குரியவர். ''நீங்கள் இதைச் செய்யக்கூடாது'' என்று வெளிப்படையாகச் சொல்லித் தடுக்க இயலாது! ஆனாலும் எப்படியாவது நம் கருத்தைத் தெரிவித்துவிட வேண்டும் என்ற எண்ணம் உந்துகிறது. குறிப்பாகச் சொல்லிப் பார்க்கிறோம். அவ்வளவுதான் நம்மால் முடியும். அந்தக் குறிப்பை உணர்ந்து கொண்டு அந்தப் பெரியவர் அந்தச் செயலை நிறுத்தினால் நமக்கு மகிழ்ச்சி உண்டாகும்.

அந்தச் செயலை ஏன் தடுக்க வேண்டும்? அவ்வளவு பெரியவரைப் பற்றிச் சிலர் பழி கூறுகிறார்கள். அந்தச் செயலைச் செய்வதையே, இழித்துக் கூறுகிறார்கள். அதைக் கேட்கும் போது நமக்கு வருத்தமாக இருக்கிறது. 'இந்த ஒரு செயலால்தானே இந்தப் பெரியவருக்குப் பழி உண்டாகிறது? இதைச் செய்யாமல் நிறுத்திவிட்டால் பழிகூறுவார் வாய் அடைத்து விடுமே!' என்று நாம் எண்ணுகிறோம்.

குறிப்பாகச் சொல்வதற்குமேல், வெளிப்படையாகச் சொல்லித் தடுப்பதற்கு நமக்குத் துணிவு இல்லை. அவருக்கு ஏதோ அறிவுரை சொல்வதுபோல் அல்லவா ஆகிவிடும்? அதற்குரிய தகுதி நமக்கு ஏது? அவரிடத்தில் அன்பு உடையோம் என்பது ஒன்றுதான் நம் தகுதி. வேறு எந்த வகையில் அவரை அணுகி அறிவுறுத்துவதற்குரிய தகுதி நம்மிடம் இருக்கிறது?

நாம் விலக்க முடியாது. ஆனால் அந்தப் பெருமானோடு எவ்வளவு பெரியவர்கள் பழகுகிறார்கள்? அவர்களெல்லாம் நம்மைவிட எவ்வளவோ வகையில் பெரியவர்கள்; அந்தப் பெருமானோடு பழகி அவரால் நலம் பெறுகிறவர்கள். அவர்களும் இதைக் கவனித்திருப்பார்கள். ஊரார் கூறும்பழி அவர்கள் காதிலும் விழுந்திருக்கும். அப்படி இருக்க, அவர்கள் ஏன் அவரிடம் கூறி அந்தச் செயலை செய்யாமல் தடுக்கவில்லை? அவர்களே விலக்காமல் சும்மா பார்த்துக்கொண்டிருக்கும்போது நம்மால் என்ன செய்ய முடியும்? அவனைத் தடுப்பதற்கு நமக்கு ஏது ஆற்றல்?

இத்தகைய நிலையில் இருந்து பேசுகிறார், காரைக்கால் அம்மையார். சிவபெருமானைப் பற்றித்தான் சொல்கிறார். சிவபெருமானிடம் அவருக்கு உள்ள அன்பைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமோ?

சிவபெருமான் என்ன செய்கிறான்? ஊரார் பழிக்கும்படி அவன் செய்கிற காரியம் என்ன?

அவன் பிச்சை வாங்குகிறான். இவ்வளவு பெரியவன், எல்லோருக்கும் எல்லாவற்றையும் ஈகிறவன் பிச்சை வாங்கலாமா? ஊரூராகத் திரிந்து பிச்சை வாங்குகிறான். அதையாவது ஒளிமறைவாகச் செய்கிறானா? இரவிலே வெளிச்சம் போட்டுக்கொண்டு போய்ப் பிச்சை எடுக்கிறான். தன் தலைமேலே சந்திரனைச் சூடிக் கொண்டு, அதன் ஒளியிலே எல்லோரும் அடையாளம் தெரிந்து கொள்ளும்படி வாங்குகிறான். இராத்திரியில் யாரும் இனம் கண்டுகொள்ளாதபடி போய் ஓரிரண்டு இடங்களிலே வாங்கினாலும், அதிகம் பேர் அறிந்திருக்கமாட்டார்கள் என்று சொல்லலாம். இந்தப் பெருமான் மற்றவர்கள் எங்கே தன்னைத் தெரிந்துகொள்ளாமல் போகிறார்களோ என்று நினைப்பவனைப் போல, இந்தச் சந்திரனைத் தலைமேல் வைத்துக் கொண்டு, விளம்பரம் செய்கிறவர்கள் வெளிச்சம் போட்டுக் கொண்டு போகிறவர்களைப் போல, ஊர்ஊராகத் திரிந்து பிச்சை வாங்குகிறான். அதைக்கண்டு ஊரார் சிரிக்கிறார்கள்; பழிக்கிறார்கள்.

அந்தப் பெருமானிடம் நன்மை பெறுகிறவர்கள் தேவர்கள். தேவர்களுக்கெல்லாம் தலைவன் அவன்; அவன் மகாதேவன். தேசு படைத்த மேனியை உடைய தேவர்கள் நம்மை விட எவ்வளவோ பெரியவர்கள்; அறிவுடையவர்கள். அவர்களுக்கு இந்தப் பழி தெரியாதோ? அவனைப் பார்த்து, 'இந்தச் சந்திரனைத் தலையில் வைத்துக்கொண்டு சின்னப் பிச்சைக்காக ஊரூர்தோறும் திரிய வேண்டாம்? என்று கெஞ்சிக் கேட்டுக்கொள்ளக் கூடாதோ? காலில் விழுந்து இரக்கக்கூடாதோ? அவர்கள் அப்படிச் செய்யத் தகுதி உடையவர்களாயிற்றே! நெருங்கிப் பழகுகிறவர்கள் அல்லவா? அவர்களே விலக்காமல் இருக்கும்போது நம்மால் என்ன செய்ய முடியும்?

**'திங்கள் இதுசூடிச் சில்பலிக்கு என்று**
**ஊர்திரியேல்**
**எங்கள் பெருமானே' என்று இரந்து —**
**பொங்கொளிய**
**வானோர் விலக்காரேல், யாம்விலக்க வல்லமே?**

நமக்குத் தெரிகிற அளவுக்கு அந்தத் தேவர்களுக்குத் தெரியாதா? அல்லது அவர்கள் விலக்குவதற்கு அஞ்சுகிறார்களா? நம்முடைய மனந்தான் இப்படி அடித்துக்கொள்கிறது. முப்பத்து முக்கோடி வானவர்கள் இருக்கிறார்களே; அவர்களுக்குள் ஒருவருக்குக்கூடவா இந்த நினைப்பு வரவில்லை? தடுக்கும் துணிவுடையவர் ஒருவர் கூடவா அந்தக் கூட்டத்தில் இல்லை? அவர்களை உள்ளொளியும் புறவொளியும் உடையவர்கள் என்று யாவரும் கொண்டாடுகிறார்களே! அப்படிப் பொங்கும் ஒளியையுடைய வானோர்களால் விலக்க முடியவில்லையா? அல்லது அதைப் பழியாகவே கருதவில்லையா?

அதெல்லாம் இருக்கட்டும். இது பழியை உண்டாக்கும் செயல் என்று நமக்குத் தெரிகிறது; ஆனால் விலக்க முடியவில்லை. வானோருக்கும் இது தெரிந்திருக்கலாம்; அவர்களும் விலக்க அஞ்சுகிறார்கள் போலும்! எம்பெருமானே இதை உணர வேண்டாமோ? தன்னை ஊரார் பழிக்கிறார்களே என்ற உணர்வு அவனுக்கு இருக்க வேண்டாமோ? இவ்வளவு பெரியவன் இந்தச் சிறிய விஷயத்தை உணராமல் இருக்கலாமோ?

இப்படியெல்லாம் அம்மையாருடைய நெஞ்சில் எண்ணங்கள் ஓடுகின்றன. எப்படிச் சமாதானம் செய்து கொள்கிறது? வானோர்களின் ஆற்றல் இன்மையையும் தம்முடைய சிறுமையையும் எண்ணி அங்கலாய்த்தவர், எம்பெருமான் ஏன் இப்படிச் செய்கிறான் என்று எண்ணமிட்டார். இது, பழியை உண்டாக்கும் செயல் என்பதை அவன் அறிய மாட்டானா? அவன் எல்லாம் அறிந்தவனாயிற்றே! எல்லாருடைய உள்ளத்திலும் நின்று அவர்களுடைய கருத்தை உணர்பவன் அல்லவா? அப்படி இருக்க, இந்தப் பழியை அவன் அறியாமலா இருந்திருப்பான்? இருந்தும் இன்றும் இப்படிச் சில் பலிக்கு என்று ஊர் திரிகிறானே!

அம்மையாருக்குச் சிறிதே தெளிவு பிறக்கிறது. அவன் எல்லாம் அறிந்தவன்; சர்வக்ஞன். யார் யாருக்கு எது வேண்டும் என்று அறிபவன். தனக்கு இன்னது வேண்டும் என்பது அவனுக்குத் தெரியாதா? அவனைப் பற்றி முழுதும் நமக்குத் தெரியாது. அவன் நம் புலன்களுக்கு எட்டாதவன். நாம் அறியும் எந்த அளவிலும் அகப்படாதவன். அவன் செயல்களும் அத்தகையனவே. உலகியலோடு அவன் செயல்களை ஒட்டிப் பார்ப்பது முறையன்று. அவன் திருவுள்ளத்தை யார் அறிவார்கள்?

தன் குழந்தையாகிய ஆருயிர்களுக்கு என்ன வேண்டும் என்பதை அறிந்தவன் அவன். ''வேண்டத்தக்க தறிவோய்நீ'' என்பது திருவாசகம். தனக்கு இன்னது வேண்டும் என்று அவனுக்குத் தெரியாதா? தான் இன்னது செய்ய வேண்டும், இன்னது செய்யக்கூடாது என்று அறியாதவனா அவன்? அறிவாளிகள் செய்யும் சில காரியங்களுக்குரிய காரணம், நமக்குப் புலப்படுவதில்லை. புறத் தோற்றத்தைக் கொண்டு, அறிவிலே குறைந்தவர்கள் அவர்கள் செயலுக்கு மாசு கற்பிக்கலாம். அது அவர்களுடைய அறியாமையால் விளைவது. அறிவாளிகளின் செயல்களுக்குத் தக்க காரணம் இருக்கும்.

முற்றறிவினனாகிய இறைவன் செய்யும் செயல்களுக்குத் தக்க காரணம் இருக்க வேண்டும். நமக்கு அந்தக் காரணம் தெரியாமையால் அவன் செய்வது தவறு என்று சொல்ல நமக்குத் தகுதியில்லை. நமக்குக் காரண காரியங்கள் எல்லாம் தெரியுமா? நம்முடைய செயல்களுக்கே பல சமயங்களில் காரணம் புரிவதில்லையே!

இறைவன் செயலின் காரணத்தை அறியும் அறிவு நமக்கு ஏது?

இப்படியெல்லாம் சிந்தனையை விரித்த அம்மையார் ஒரு முடிவிற்கு வருகிறார். அவனுக்குத் தெரியும், தனக்கு எது தக்க செயலென்று. காரணம் தெரியாமல் இருப்பது நம் குறையே யன்றி அவன் குறையன்று. தனக்கு எது முறையென்பதைத் தானே அறிவான்.

**தானே அறிவான் தனக்கு.**

அவன் செயலைப் பற்றிக் குறைகூற நாம் யார்? அந்த வானவர்களுக்குத்தான் என்ன தகுதி இருக்கிறது? அவர்கள் எவ்வளவு ஒளியுடையவர்களாக இருந்தால்தான் என்ன? பேரொளிப் பிழம்பாகிய இறைவன்முன் அந்த ஒளி எம்மாத்திரம்?

**'திங்கள் இதுசூடிச் சில்பலிக்கு என்று ஊர்திரியேல்,**
**எங்கள் பெருமானே' என்று இரந்து— பொங்கொளிய**
**வானோர் விலக்காரேல், யாம்விலக்க வல்லமே?**
**தானே அறிவான் தனக்கு.**

''இந்தச் சந்திரனைத் தலையிலே அணிந்து கொண்டு சிறிய பிச்சைக்காக ஊர்தோறும் திரியாதே, எம்பெருமானே'' என்று கெஞ்சிக் கேட்டுக்கொண்டு, மிக்க ஒளியை உடைய, தேவர்கள் சிவபெருமான் பிச்சை எடுப்பதை விலக்காமல் இருப்பாரானால், ஒன்றுக்கும் பற்றாத யாம் விலக்கும் வன்மையை உடையேமா? தனக்கு உரியதைத் தானே அறிவான் எம்பெருமான்.

[சூடி—தலையில் அணிந்து கொண்டு, சில் பலி—சிறிய பிச்சை; சில என்பது சிறுமையைக் குறித்தது, 'சின்னீர்' என்பது போல. ஊர்திரியேல்—ஊர்தோறும் திரியாதே; ''ஊரூரன் பலிக்குழல்வான்'' என்பர். பொங்கு ஒளிய வானோர்—மிக்கொளிரும் ஒளியையுடைய திருமேனி படைத்த தேவர்கள்; ஒளி, உள்ளொளியாகிய அறிவையும் புறவொளியாகிய தேசையும் குறிக்கும். தேவர்கள் இரண்டும் உடையவர்கள். அவர்கள் அறிவு நிரம்பியவர்களாதலின் புலவர் என்ற பெயரை உடையவர்கள். வல்லமே: ஏகாரம்; வினா; வன்மையை உடையேம் அல்லோம் என்ற பொருள்பட நின்றது. தனக்கு உரியதை என்று ஒரு சொல் வருவித்துமுடிக்க. 'தானே சொல்லாமலே அறிபவனுக்கு விலக்க வல்லமே' என்று கூட்டிப்பொருள் கொள்வதும் பொருந்தும். தனக்கு என்பதை உருபு மயக்கமாகக்கொண்டு தன்னை விலக்க வல்லமே என்று பொருள் கொள்க.]

காரைக்கால் அம்மையார் இறைவனை நெருங்கிப் பாடியது இது. இது அற்புதத் திருவந்தாதியில் 43-ஆம் பாட்டு.



'ஆண்டவன் இல்லை' என்ற படியிலிருந்து இறங்கி 'இறைவனைத் தவிர' என்ற படியை நோக்கி முன்னேறு.

—**இக்பால்**

மனிதன் பூமியில் மறுபிறப்பை அடைவதற்கு இரண்டு வித்துக்களே காரணம். முதலாவது துக்கம்; இரண்டாவது மன அந்தகாரம். அகங்காரம் காரணமாகவே அவை ஏற்படுகின்றன. அகங்காரத்திற்குக் காரணம் ஞானமின்மையே.

—**ஆதிசங்கரர்**

எந்த ஜீவனும் பாவம் செய்யாமல் இருக்க வேண்டும். எந்த ஜீவனுக்கும் எந்தத் துன்பமும் ஏற்படக்கூடாது. பிரபஞ்சம் முழுவதுமே மோட்சத்தை அடைய வேண்டும். இவ்விதம் விரும்புகிற மனப்பான்மையைத்தான் நட்பு உள்ளம் என்று சொல்வார்கள்.

—**யோகசாஸ்த்ரம்**

கோவணாண்டிக் கோலமோ, ஜடை முடியோ, அழுக்கேறிய உடம்போ, பட்டினி கிடப்பதோ, மண்மீது புரளுவதோ, மூச்சை அடக்கிக்கொண்டு உட்கார்ந்திருப்பதோ — ஆசையை வெல்லாத ஒருவனைப் பரிசுத்தவனாக்கி விடாது.

—**புத்தர்**

நிறம், சுவை முதலியன இல்லாத மழை நீர், பெய்யும் இடத்திற்கு ஏற்றபடி நிறமும் சுவையும் பெறுகிறது. அதைப் போல மக்களின் அறிவும் அவர்கள் கலந்து பழகும் நண்பர்களுக்கு ஏற்றபடி அமையும்.

—**திருவள்ளுவர்**



# கருதுக கருத்தை

வே. தில்லைநாயகம்
தமிழ்நாடு பொது நூலக இயக்குனர்

## 1. கருத்து

உலகத்தில் எந்த ஒரு கருத்தும் திடுதிடுப்பு என்று வானத்தில் இருந்து என வந்து விழுந்து விடுவது இல்லை!

சிலர் சொல்லிக்கொள்வது போல பூமியில் இருந்து சுயம்பு லிங்கமாய் முளைத்து எழுந்து விடுவதும் இல்லை!

கடலில் இருந்து அலைமேல் புரண்டு, 'வலையில் பிடித்துக்கொள்' என்று உருண்டு வந்து விழுந்து விடுவதும் இல்லை.

## 2. விதை வட்டம்

விதை பூமியில் விழுந்து, ஈரத்தை ஈர்த்து, வெப்பத்தைக் கிரகித்து, உரத்தை உறிஞ்சி, முளைவிடுகிறது; பிறகு வேர் ஊன்றுகிறது. செடி ஆகித் தழைக்கிறது. பூவிட்டு காய்க்கிறது; கனி ஆகிறது. கனியிலிருந்து விதை பிரிகிறது. திரும்ப உயிர்வட்டம்—தாவர உயிர் வட்டம்—தொடங்கி நடக்கிறது.

கருத்து வளர்ச்சியும்—மனிதன் முயற்சியும் இப்படித்தான். சான்று வேண்டுமா?

## 3. அனுமன்

இராவணன் தூக்கிக்கொண்டு போய்விட்ட சீதையைத் தேடும் படலம்! கடலைக் கடப்பது யார் என்ற கேள்வி பிறக்கிறது.

நீலன் முதலியோர் தங்களால் கடலைக் கடந்து செல்ல இயலாது என்கிறார்கள்.

நான் கடலைத் தாண்டி இலங்கையை எட்டி விடுவேன்; ஆனால் அங்கு இருந்து மீள்வது முடியாது என்கிறான் அங்கதன்.

முன்னொரு நாள் உலகைச் சுற்றியபோது மேருமலையில் மோதி கால் முடமாகிவிட்டது. எனவே இப்போது முடியாது என்கிறான் சாம்பவான்.

தொடர்ந்து அனுமன் பலத்தை அவனுக்கே எடுத்துச் சொல்கிறான், சாம்பவான்:

'அப்படியா இதோ புறப்படுகிறேன்' என்று எம்பிப் பாய்கிறான் வாயுபுத்திரன்! வானவெளியிலே பறக்கிறான். வழியிலே கண்ட தடைகளைத் தாண்டி சீதையைக் காண்கிறான்.

'கண்டேன் சீதையை' என்று களிப்போடு திரும்புகிறான் அனுமன்.

## 4. விவேகானந்தர்

அனுமன் பலத்தை எடுத்துச் சொல்ல சாம்பவான் தேவைப்பட்டான் அன்று.

அதுபோல இந்திய மக்கள்—தம்மில்— தம் நாட்டின் — தம்பண்பாட்டின்—தம் முன்னோர் உரைத்த வேத, ஆகம, இதிகாச சாத்திரங்களின், பெருமையை உலகத்திற்கு எடுத்துரைக்க ஊக்கினார் இராமகிருஷ்ணர் தம் சீடரான சுவாமி விவேகானந்தரை.

இச்செய்தியை ஊரறியும்; உலகறியும்; எனினும் நினைவூட்டுகிறேன்.

## 5. கலைக் களஞ்சியம்

### 5—1 பேலூர் மடம்

அப்போது விவேகானந்தர் பேலூரில் உள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தில் தங்கி இருந்தார். அப்போது அவரைக்காண சீடர் ஒருவர் வந்தார்.

### 5—2 களஞ்சியம்

சுவாமிகள் அறையில் சில நாட்களுக்குமுன் வந்திருந்த பிரிட்டானியக் கலைக்களஞ்சியத் (Encyclopaedia Brittanica) தொகுதிகளைக் கண்டார்.

### 5—3 படிக்க முடியுமா?

உரையாடல்போக்கில் சீடர், பிரிட்டானியக் கலைக் களஞ்சியத்தை ஒருவர் வாழ்நாளில், படித்து முடிக்க முடியுமா? இயலாத காரியம் என்றார்.

### 5—4 பத்து ஆயிற்று

ஏற்கனவே பத்துத் தொகுதிகளைப் படித்து முடித்து ஆயிற்று. வேண்டுமானால் கேள்விகளைக் கேட்டுப் பார் என்றார் சுவாமிகள்.

### 5—5 எப்படி முடிகிறது?

திகைத்துப் போனார் சீடர். இது எப்படி முடிகிறது? இது மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்டது என்று எண்ணினார்; எனினும் அதன் சக்தியை அறிய விரும்பி எப்படி சுவாமிகள் அது முடியும்? என்று கேட்கிறார். அவர் சொல்கிறார்; என்ன சொல்கிறார்?

### 6. வெற்றிக்கு வழி

**6–1 சொல்**

ஒரு கருத்தை எடுத்துக்கொள்க. அந்த ஒரு கருத்தையே உனது வாழ்க்கை மயமாக்குக. அதையே கனவு காண்க. அந்த ஒரு கருத்தை ஒட்டியே வாழ்ந்து வருக. மூளை, தசைகள், நரம்புகள் முதலிய உன் உடம்பில் ஒவ்வொரு பாகத்திலும் அந்த ஒரு கருத்தே நிறைந்து இருக்கட்டும். அந்த நிலையில் மற்ற எல்லாக் கருத்துகளையும் தவிர்த்து விடுக. வெற்றிக்கு இதுதான் வழி—என்று சிடருக்கு எடுத்து உரைக்கிறார் விவேகானந்தர்.

**6–2 செயல்**

இதையே தன் வாழ்வில் கடைப்பிடித்தார் சுவாமிகள். இதனால்தான் 1863-ல் தோன்றி 1902-ல் மறைந்தபோதிலும், முப்பத்தி ஒன்பது ஆண்டு வாழ்க்கையிலே உலகப்புகழ்பெற்ற உத்தமரானார். சான்றாண்மை வாழ்க்கையினால் சகம் புகழும் சான்றோர் ஆனார். அவர் வாக்கு அகிலம் எல்லாம் பரவியது.

**6–3 நம்மால் முடியுமா?**

இது துறவிகளால் முடியும். பெரியோர்களால் முடியும். சான்றோர்களால் முடியும். நம்மால் முடியுமா என்று நம் உடன்பிறப்புகள் கேட்கலாம்; கேட்கிறார்கள்.

**6–4 முடியும்**

இது நிச்சயமாய் முடியும். எப்போது முடியும்? சுவாமி விவேகானந்தர் சொல்லியபடி எடுத்த கருமத்தில் ஈடுபட வேண்டும். மெய் வருத்தம் பாராது கண்துஞ்சாது அடுத்தவர் கேலியைக் கவனிக்காது, உழைத்தால் முடியும். உயரலாம். இதோ சான்றுகள் இரண்டு.

### 7. மெல்வில் டூயி

**7–1 நூலகம் போவீர்களா?**

நீங்கள் — இப்பேச்சைக் கேட்கும் நீங்கள் — நூலகம் போவீர்களா?

**7–2 அடுக்கு**

போனால் நூல்கள் எல்லாம் பொருள்வாரியாக அடுக்கி வைக்கப்பட்டிருப்பதைக் காணலாம்.

**7–3 பதின்முறை**

இந்தப் பணிக்கு மேனாடுகளில் அதிகமாகப் பயன்படும் பகுப்பு முறைக்கு பதின்முறை பகுப்பு—(Decimal Classification) என்று பெயர். அதாவது பகுப்பு எண்கள், 1,2 முதல் 9 வரை உள்ள அனைத்து நாட்டு எண் முறை (International Numeral) யில் எண்களாலேயே எழுதப்பட்டிருக்கும்.

**7–4 கர்த்தா**

இந்த பகுப்பு முறையின் கர்த்தா மெல்வில் டூயி என்பவராகும். அமெரிக்காவில் 1851-ல் தோன்றி 1931-ல் மறைந்தார்.

**7–5 பாராட்டு**

டூயியைப் பாராட்டுமுகத்தான் அமெரிக்கப் பாராளுமன்ற நூலகர் சொன்னதாவது:

திருவாளர் டூயி உண்பதும், குடிப்பதும், உடுப்பதும், வாழ்வதும் நூலகப்பணிதான். நாள் ஒன்றுக்கு இருபத்தி நான்கு மணி நேரமும் ஆண்டின் முந்நூற்றி அறுபத்தி ஐந்து நாளும் அவர் வாழ்வின் எண்பது ஆண்டுகளில் அறுபது ஆண்டுகள் நூலகப் பணியாகவே, வாழ்ந்தார்.

இது விளக்குவது என்ன? விவேகானந்தரின் கருத்து ஒருமையேதான்.

### 8. அரங்கநாதன்

**8–1 போன தலைமுறை**

இது எல்லாம் போன நூற்றாண்டு மனிதரால் முடியும். இப்போதைய தலைமுறையில் முடியுமா என்ற கேள்வி எழும்புவது இயற்கை.

**8–2 இப்போதும் முடியும்**

இது இப்போதும் முடியும் என்பதை நிரூபித்தார் டாக்டர் அரங்கநாதன். அவர் யார்?

**8–3 அவர் யார்?**

நம்மோடு நம் காலத்தில் சென்னையில் பல்கலைக்கழக நூலகத்திலே—காசி பல்கலைக் கழகத்திலே — தில்லிப் பல்கலைக் கழகத்திலே — பங்களூர் ஆயத் தொகுப்பு ஆராய்ச்சி— பயிற்சி மையத்திலே (Documentation Research and Training Centre, Bangalore) பணியாற்றி உலகம் புகழும் கோலன் பகுப்பு முறை கண்டார். எண்பது ஆண்டுகளிலே நாற்பத்தி எட்டு ஆண்டுகள் நூலகப் பணியிலே கருத்தைச் செலுத்தி உலகப்புகழ் பெற்றார்.

### 9. உழைப்பு உயர்வு

ஆம். ஓயாது உழைத்தார். உலகப்புகழ் பெற்றார். அதுபோல நாமும் உழைப்போம். உயர்வோம்.

*(சான்றோர் வாக்கு வரிசையில் சென்னை வானொலியில் 23-7-77அன்று பேசியது).*



# சுவாமி பிரேமானந்தரின் போதனைகள்

தமிழாக்கம்: 'அண்ணு' சுப்ரமண்யம்

ஸ்ரீ ராமகிருஷ்ணரின் சிடர்களாகிய நாங்கள், அந்தப் பிரபுவின் கைகளில் கருவிகளைப் போன்றவர்களே என்பதை நீங்கள் தெரிந்துகொள்ள வில்லையா? அவருடைய சக்திதான் இந்த மடத்தில் வெளிப்பட்டுக்கொண்டிருக்கிறது. நீங்கள் நல்ல பணிகள் செய்வுதெல்லாம் அந்த தெய்வீக சக்தியாலேயே. அதனுல் கர்மத் தளைகள் நசித்துப்போய் நீங்கள் பராபத்தியை அடைவீர்கள் என்பதை நம்புங்கள்.

நீங்கள் உடலில் வாழும்போதே முக்தி எய்தியவர்களாக, ஜீவன் முக்தர்களாக விளங்குவீர்கள். நீங்கள் என்ன சாதாரண மனிதர்களா? பராசக்தியின் வடிவமேயாகிய ஸ்ரீ தூய அன்னையாரின் திருவருள் உங்களுக்கு இருக்கிறது என்பதை மறந்துவிட்டீர்களா? உலகில் எத்தனை பேருக்கு இந்த வாய்ப்பும் சிறந்த பாக்கியமும் உண்டு?

'பிரபுவே! நான் இல்லை, நீர் தான்' என்னும் இந்த இலட்சியம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. 'நான் கருவி, நீர் கர்த்தா. நான் தேர், நீர் சாரதி.' ஒவ்வொரு நாளும் இதை நான் உணரும்படி. கருணைக்கடலான பகவான் அருள் புரிகிறுர்.

பகவான் ஹரியின் திருவடிகளைப் பிடித்துக் கொண்டு அவருடைய சக்தியால் அவரையே மனித குலம் முழுவதிலும் சேவிக்க வேண்டும்.

அவருடைய அருள் உன்னிடம் உள்ளது. ஞான ஒளி வீசும் மகாத்மாக்களின் அருளும் உனக்கு இருக்கிறது. பகவான் அந்தர்யாமி; அவர் அனைத்தையும் பார்க்கிறுர், அனைத்தையும் அறிகிறுர். கள்ளங்கபடற்ற தூய உள்ளத்துடன் அவரிடம் உன் விருப்பங்களை எல்லாம் தெரிவித்துப் பிரார்த்தனை செய். உன்னைக் காட்டிலும் அவர் உனக்கு மிகுதியும் சொந்தமானவர். உன் பிரார்த்தனைகளுக்கு அவர், செவி சாய்ப்பார் என்பது நிச்சயம். அவரைச் சரணடைந்து உன்னுடைய சாதனங்களைப் பழகு. அவருடைய அருளால் உனது வாழ்க்கை இன்பம் நிறைந்ததாகும்.

சுயநலத்தையே நாடுவதை விடாதவனும், இந்திரிய சுகங்களைத் தேடுவதை விடாதவனும் ஆகிய ஒருவனை மனிதன் என்று சொல்வது



சுவாமி பிரேமானந்தர்

தகுமா? பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணருடைய திருநாமத்தை உச்சரித்துக்கொண்டே ஒருவன் குறுகிய சுயநலத்தை நாடுபவனுக இருந்தால், அந்தப் பாசாங்குக்காரனுக்கு மீளவே வழியில்லை. நன்றுக யோசித்துத் திடச் சித்தத்துடன் செயல்படுவாயாக.

உன்னுடைய உடல்நலம் குன்றியிருப்பதைக் கேட்சு மிகவும் கவலையாக இருக்கிறது. நான் சில சமயங்களில் பின்வரும் பாட்டைப் பாடுவேன்:

''நீ என்னை எந்த சமயத்தில் எந்த நிலையில் வைத்தாலும், நான் உன்னை மறக்காமல் இருந்தால் அது எனக்கு நல்லதே ஆகும். என்னைப் பொன்னுலும் ஆபரணங்களாலும் இரத்தினங்களாலும் அலங்கரித்து ஒரு சிம்மாசனத்தில் ஏற்றினுலும், ஒரு மரத்தடியில் வீழ்த்தினுலும் எனக்கு அக்கரையில்லை — நான் உன்னை மறக்காமல் இருந்தால் போதும்.

''மனமே! நீ உனக்குள்ளேயே இரு. வேறு ஒருவர் வீட்டுக்கும் போகாதே. இருக்கும் இடத்திலேயே இரு. நீ விரும்புவது எதுவானுலும்

உனது உள்ளத்திலேயே தேடினால் அங்கேயே காண்பாய்.''

சட்ட திட்டங்கள் நடத்தையை ஒழுங்கு படுத்தக்கூடும். ஆனால் அவைகள் மனதை அடக்க உதவமாட்டா. ஸ்ரீ ராமகிருஷ்ணரை முழு மனதுடன் வழிபட்டால் நீ நல்ல பயனை அடைவாய். நாளடைவில் பிறருடன் உனக்குள்ள உறவில் சமரசத்தைக் காண்பாய். பக்தியும் திட நம்பிக்கையும் ஒப்பற்றவை. மனிதன் எப்பொழுதும் பெயர், புகழ், கௌரவம் முதலிய வெளிப்பொருள்களிலேயே நாட்டமுடையவனாக இருக்கிறான். நமக்கு வேண்டுவது திடமானதும் அசைக்க முடியாததுமாகிய தெய்வ நம்பிக்கை, அளவு கடந்த தைரியம், தீவிரமான பித்துப் போன்ற அன்பு. பிரிவினைகளும் பூசல்களும் ஒழிய வேண்டும். நாம் இங்கு வந்திருக்கும் காலம் மிகக் குறுகியது. குப்பைகளைக் கூட்டுவதிலேயே கவலைகொண்டு காலத்தைப் போக்கிவிட வேண்டாம். மற்றவர்கள் எப்படி வேணுமானாலும் செய்யட்டும்.

ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் இருந்து நான் பின் வரும் பாட்டைக் கேட்டிருக்கிறேன்.

''ஸ்ரீ ராமன் அரசாளும் அயோத்திக்குப் போய் அவரைச் சரணடைந்து அவரிடம் எனது பாரத்தை ஒப்புவித்து விடப்போகிறேன். அவருடைய திருவடிகளை மார்புடன் இறுகத் தழுவிக்கொண்டு 'நீ கொடுத்த பாரத்தை உன்னிடம் ஒப்புவித்து விட்டேன்; இனிமேல் இப் புவியில் புதியதொரு பாரத்தை எனக்குக் கொடுக்காதே' என்று அவரிடம் வேண்டிக் கொள்வேன். பகவானிடம் சரண் அடைக. எல்லா நிலைகளிலும் அவனை மறவாமல் இரு. ஒருபொழுதும் அவனைவிட்டு விலகாதே.''

ஸ்ரீராமகிருஷ்ணரைச் சரணடைந்து அவரை கெட்டியாகப் பிடித்துக்கொள். உன்னுடைய உடல்நலக் குறைவைப் பற்றியும் நோயைப் பற்றியுமே ஏன் நினைத்துக்கொண்டிருக்க வேண்டும்? 'நான் பகவானைச் சேர்ந்தவன். அவர் தான் என்னுடைய அழியாத செல்வம்; அவர் ஒருவர்தான் உண்மை; என்னுடைய நன்மைக்கு அவர் ஒருவரே காரணம்' என்று எல்லாக் காலத்திலும் எல்லா நிலைகளிலும் நினைத்துக்கொள். 'நாஹம் நாஹம்—நானன்று நானன்று; நீயே தான், நீயே தான் எனது பிரபுவே' என்று எப்பொழுதும் சிந்தனை செய்.

பகவந் நாமத்தை எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஜபம் செய். உனக்கு அப்போது பயமே இல்லாமல் போகும். மரணத்தை வென்ற ம்ருத்யுஞ்ஜயனுடைய குழந்தைகள் நாமெல்லாம். இதை எப்போதும் மனதில் வைத்துக் கொள்.

பாலர்களுக்கு ஒரு பள்ளி ஆரம்பிக்க நீ விரும்புகிறாய். அது மிகவும் நல்ல எண்ணம். சுவாமிஜியும் கல்வியை வளர்க்க விரும்பினார். அவருடைய இறுதி நாளன்று கடைசி மூச்சு வரை நமது நாட்டு மக்களுக்குக் கல்வியின் தேவையைப் பற்றி என்னிடம் பேசிக்கொண்டிருந்தார். வித்யா தானம், அதை அளிப்பவருக்கும் பெறுபவருக்கும் ஒரே சமயத்தில் நன்மை தருகிறது. அது நாட்டிற்குச் செய்யும் சிறந்த சேவை ஆகும். பிறருக்கு நல்வழி காட்டும் வகையில் எடுத்துக்காட்டாக நீ வாழ்க்கை நடத்த வேண்டும். உன்னைப் பின்பற்றி வாழும் மாணவர்கள் உலகில் உத்தமர்களாக விளங்குவார்கள்.

கல்வியைப் பரப்புவதில் வழிகாட்டுபவர்களாக இருங்கள். துறவிகளிடமிருந்து கல்வி பயிலும் மாணவர்கள் இலட்சியத்தில் பற்றுள்ளவர்களாக இருப்பார்கள்; அவர்கள் மூலம் நாட்டின் வளமும் திரும்பி வரும். அவர்கள் சிறந்த மனிதர்களாக மட்டுமல்லாமல், தெய்வங்களாகவும் ரிஷிகளாகவும் விளங்குவார்கள்.



குற்றம் இல்லா உள்ளம் எதுஎதை விரும்புகிறதோ அதை எல்லாம் அளிப்பவன் அருட்பெருஞ்ஜோதி ஆண்டவன்.
—வள்ளலார்

எல்லா யோகிகளுக்குள்ளும் என்னிடம் மனதைச் செலுத்திச் சிரத்தையுடன் என்னைப் பூஜிப்பவனையே மிகச் சிறந்தவனாக மதிக்கிறேன்.
—கீதை

ஒரு செம்படவன் வலையில் மீன் சிக்குவதைப் போல, ஈசனும் ஆன்மாவின் பக்தி வலையில் அகப்படுவான்.
—ஞான ரத்னாவளி



# ஒரு பௌத்தப் பெண்மணியின் கதை

'ஆசையே துன்பத்திற்குக் காரணம்' என்று சொன்ன புத்தபிரான், உலகம் துன்ப மய மானது என்பதை உள்ளங்கை நெல்லிக் கனியைப் போல சுட்டிக் காட்டினர். எல்லாத் துன்பங்களிலிருந்தும் விடுபடுவதற்காகவும், நிர்வாணம் என்று பௌத்தம் குறிப்பிடும் மெய்யறிவில் நிலைபெற்ற பேரின்ப முக்தி நிலையைப் பெறுவதற்காகவும், ஆண்களையும் பெண்களையும் பாகுபாடின்றித் துறவற வாழ்க்கையை மேற்கொள்ளச் செய்தார். புத்தர் பெருமான் நிறுவிய துறவியர்களைக் கொண்ட பௌத்த சங்கம், அலாதியான மகிமை பெற்ற மணி மகுடமாக உலக சரித்திரத்தில் விளங்குகிறது.

புத்தபிரானின் திருவருளைப் பெற்று, ஆயிர மாயிரம் மக்கள் வாழ்க்கையின் பயனை அடைந்திருக்கிறார்கள். அவர்களிலே, துறவற வாழ்க்கையை மேற்கொண்டு தெய்வத்தின் நிலையில் வைத்துப் பூஜிக்கும் நிலையை அடைந்த பெண் மணிகளும் இருக்கிறார்கள்.

பௌத்த பிக்ஷுணிகளில், மகான்களின் நிலையிலே வைத்து அன்றும் இன்றும் வழிபடப் படுபவர்களில் படாசாரா என்பவளும் ஒருத்தி. அவளுடைய முற்பகுதி வாழ்க்கை சுருக்கமாகக் கீழே தரப்படுகிறது.

படாசாரா என்றால் பரிபூரண நல்லொழுக்கம் கொண்டவள், கடமைகளைச் சரிவர முழு அளவில் ஆற்றியவள் என்பது பொருள். இந்தப் பெயர் அவளுக்குத் துறவற வாழ்க்கையை மேற்கொண்ட பிறகு கொடுக்கப்பட்டது. அவளுடைய இயற்பெயர் என்ன என்பது தெரியவில்லை.

பண்டைக் காலத்தில், சிராவஸ்தி என்னும் புகழ்பெற்ற நகரம் இருந்தது. அந்த நகரிலே லேவாதேவி செய்து வந்த ஒரு பெரிய பணக்காரரின் குடும்பத்தில் படாசாரா பிறந்தாள்.

படாசாரா வளர்ந்து திருமணப் பருவம் எய்தினாள். அப்போது அவள், தனது தந்தையிடம் வேலை பார்த்து வந்த ஓர் இளைஞன் மீது மனம் கொண்டாள்.

இந்த விவரம் அவளுடைய தந்தைக்குத் தெரியாது. அவர் தமது போக்கில், தம்முடைய அந்தஸ்துக்கு ஏற்ற ஒரு பெரிய குடும்பத்திலே மகளைத் திருமணம் செய்து கொடுத்துச் சீரும் சிறப்புமாக வாழ வைக்கும் முயற்சிகளை மேற்கொண்டார்.

இந்த நிலையில், மனம் சங்கடப்பட்ட படாசாராவும் அவளது மனம் கவர்ந்த இளைஞனும், சிராவஸ்தி நகரத்தைவிட்டே ஓடிச்சென்று விடுவது என்று முடிவு செய்தார்கள். அதன்படியே ஒரு நாள் இருவரும் இரகசியமாக நகரத்தைவிட்டே கிளம்பித் தொலைவில் உள்ள ஒரு கிராமத்தை அடைந்தார்கள். கணவனும் மனைவியுமாக வாழ ஆரம்பித்தார்கள்.

சிறிது காலம் கடந்தது. படாசாரா கர்ப்பவதி ஆனாள். அவளுக்குப் பிறந்தகத்துக்குச் செல்லும் ஆவல் மிகுதியாக இருந்தது. ஆதலால் அவள் 'முதல் குழந்தை பிறக்க இருக்கும் இந்தச் சமயத்தில் என்னுடைய தாய் வீட்டில் இருக்க வேண்டும்' என்று கணவனிடம் தெரிவித்தாள். ஆனால் அவளுடைய கணவன் அதற்கு ஒப்புக் கொள்ளவில்லை. முதல் குழந்தை கிராமத்திலேயே பிறந்தது.

படாசாரா மீண்டும் இரண்டாம் முறையாகக் கர்ப்பம் தரித்தாள். அப்போதும்

அவள் பிறந்த வீடு செல்லப் பெரிதும் விரும்பினாள். முன்பு போலவே அவளுடைய கணவன் மறுப்புத் தெரிவித்தான். ஆனால் இந்த முறை, தனது தாய் வீட்டுக்குச் சென்றே ஆகவேண்டும் என்று படாசாரா பிடிவாதமாக இருந்தாள். முடிவில் கணவனும் அதற்கு ஒப்புக் கொண்டான்.

இருவரும் கிராமத்தைவிட்டு சிராவஸ்தி நகரத்தை நோக்கிப் புறப்பட்டார்கள். ஆனால் தாய் வீட்டுக்குப் போய்ச்சேருவதற்கும் முன்பாகவே, வழியிலேயே படாசாராவுக்குக் குழந்தை பிறந்து விட்டது.

அந்நிலையில், தாய்க்கும் குழந்தைக்கும் பாதுகாப்பாக ஒரு குடிசையை அமைக்கக் கணவன் நினைத்தான். அதன்பொருட்டு அவன் செடி கொடிகளைச் சேகரிப்பதற்காக, பக்கத்திலே இருந்த ஓர் அடர்ந்த காட்டுக்குள் சென்றான். காட்டில் அவனை ஒரு நாகம் தீண்டியது. அவன் அங்கேயே விழ்ந்து உயிர் நீத்தான்!

பிரசவம் ஆகியிருந்த படாசாரா, கணவனின் வருகையை வழி மேல் விழி வைத்து வெகு ஆவலோடு நோக்கி இருந்தாள். நேரம் கடந்து கொண்டிருந்தது. கணவனோ வந்த பாடில்லை! காரணம் புரியாத படாசாரா மனம் குழம்பினாள். காத்திருந்து காத்திருந்து மிகவும் கவலை கொண்ட நிலையில், தானே கணவனைத் தேடிச் செல்ல முடிவு செய்தாள்.

நடக்கக் கூடிய சக்தி அவளுடைய உடலிலே இல்லை. அவளோ தள்ளாத நிலையில் இருந்தாள். என்றாலும் தானே மெல்ல எழுந்திருந்து கணவனைக் காட்டில் தேடத் தொடங்கினாள். கணவன் அரவம் தீண்டிப் பிணமாகக் கிடப்பதைப் பார்த்தாள்! உலகமே இடிந்து தனது தலையிலே விழுந்திருந்தால்கூட படாசாரா அப்படி அதிர்ந்துபோயிருக்க மாட்டாள்! பேரிடி! காரிகையின் நெஞ்சம் கலங்கித் துடிதுடித்தது. இப்படிப்பட்ட ஒரு பேரிடியை அவள் எப்படி எதிர்பார்த்திருக்க முடியும்?

பிறகு மூத்த குழந்தையை ஒரு கையில் பிடித்துக் கொண்டும், மறு கையில் சிசுவை அணைத்தபடியும் படாசாரா தந்தையின் வீட்டை நோக்கி நடந்தாள்.

வழியிலே ஓர் ஆறு குறுக்கிட்டது. இரண்டு குழந்தைகளையும் அழைத்துக்கொண்டு ஒரே சமயத்தில் ஆற்றைக் கடக்க முடியாது என்பது தெரிந்தது. ஆதலால், அவள் மூத்த குழந்தையைக் கரையிலேயே நிறுத்திவிட்டுப் பிறந்த சிசுவுடன் மறு கரையை அடைந்தாள். அங்கே இருந்த ஒரு கல்லின்மீது சில தழைகளையும் கொடிகளையும் பரப்பிச் சிசுவை அதன்மீது வைத்து மூடினாள்.

பிறகு மூத்த குழந்தையை எடுத்து வருவதற்காகக் கரையை நோக்கிப் புறப்பட்டாள். பாதி ஆற்றைக் கடந்து கொண்டிருந்த நிலையில், ஒரு பெரிய பருந்து மறுகரையிலே இருந்த சிசுவை நோக்கி வேகமாகப் பாய்ந்து இறங்கியதைக் கண்டாள்!

படாசாராவின் மனம் பதைபதைத்தது. அவள் பருந்தைத் துரத்துவதற்காக இரண்டு கைகளையும் தூக்கித் தூக்கி ஆட்டினாள். அவளுடைய செய்கையைக் கரையிலே இருந்த மூத்த குழந்தை பார்த்தது. அது, தன்னைத் தாயார் உடனே வருமாறு அழைக்கிறாள் என்று நினைத்துத் தண்ணீரில் இறங்கிவிட்டது! படாசாரா எந்தக் குழந்தையையுமே காப்பாற்றும் நிலையில் அருகில் இல்லை! அந்த அபாக்கியவதி, ஒரே சமயத்தில் சிசுவைப் பருந்து எடுத்துச் செல்வதையும் மூத்த குழந்தையை ஆற்று வெள்ளம் அடித்துக் கொண்டு போவதையும் கண் முன்னால் கண்டாள்!

வேறு கதி இல்லாத நிலையில், அவள் மனம் உடைந்தவளாக சிராவஸ்தி பட்டணத்தில் உள்ள தனது தந்தையின் வீட்டை நோக்கி நடந்தாள். அங்கே, முதல் நாள் பெய்த கடும் மழையின் காரணமாக அவள் பிறந்து வளர்ந்த பழைய வீடு இடிந்து போயிருந்தது. ஊர்க்காரர்கள், வீடு இடிந்து விழுந்தபோது அவளுடைய பெற்றோர்களும் சகோதரனும் மாண்டுவிட்டார்கள் என்ற செய்தியைத் தெரிவித்தார்கள்!

படாசாராவுக்குத் தலை சுழன்றது. முழு உலகமும் அவளுக்குச் சுழலுவதைப் போல இருந்தது. அவளுடைய மூளை குழம்பியது. அவளுக்குப் பைத்தியமே பிடித்துவிட்டது! ஆம், உண்மையாகவே அவளுக்குப் பைத்தியம் பிடித்துவிட்டது. இப்போது அவள் வீதியிலே திரியும் ஒரு பைத்தியக்காரி ஆகிவிட்டாள்!

புலம்பினாள், சிரித்தாள், அலறி அழுதாள். கண்டபடி பிதற்றிக் கொண்டும் பயங்கரமாகக் கண்களை உருட்டி விழித்து விழித்துப் பார்த்துக்

கொண்டும், சுய அறிவு இல்லாதவளாக அந்தப் பைத்தியக்காரி ஊர் ஊராகச் சுற்றித் திரிந்தாள். ஒரு காலத்திலே, பணியாட்கள் புடை சூழ்ந்து ஏவலுக்குக் காத்திருக்கச் செல்வச் செழிப்பிலே தாலாட்டி வளர்க்கப்பட்ட அந்தக் குலமகள், அழுக்கேறியும் கிழிந்தும் போதுமானதாக இல்லாததுமாகிய சிறுசிறு துண்டுத் துணிகளை ஆடையாக உடலிலே சுற்றிக் கொண்டு திரிந்து கொண்டிருந்தாள்!

இந்த நிலையிலே ஒரு நாள், அவளுடைய முற்பிறவியின் நல்வினைப் பயனாக பகவான் புத்ததேவரின் கிருபை அவளுக்குக் கிடைத்தது.

ஒரு சமயம், புத்தபிரான் குழுமி இருந்த மக்களுக்கு அற போதனை செய்து கொண்டிருந்தார். அப்போது தற்செயலாக அவர், இந்தப் பைத்தியக்காரியைப் பார்த்தார். அந்தத் தயாளமூர்த்தி அவளைச் சுயநிலைக்கு மீளுமாறு கருணை செய்தார்.

பைத்தியம் தெளிந்த படாசாரா, தன்னுடைய பைத்தியக்காரியின் உடைக்கோலங்கள் எல்லாவற்றையும் மாற்றிக்கொண்டு புத்த தேவரின் முன்னால் வந்தாள். அவரிடம் தனக்கு நேர்ந்த எல்லாக் கஷ்டங்களையும் விளக்கமாக எடுத்துச் சொன்னாள். தயாளுவான புத்த பிரான், அவளைத் தவவாழ்க்கைக்கு நிவேதனமாகச் சமர்ப்பிக்கும் எண்ணம் கொண்டார். அவர் கருணை பொங்க அவளிடம், ''மகளே! இதைப் போல உற்றார் உறவினர்களை இழந்து நீ கண்ணீர் பெருக்கியது, உனது முன் ஜன்மங்களில் எத்தனை எத்தனை தடவைகளோ! அம்மா, நீ சிந்திய கண்ணீரை எல்லாம் சேர்த்தால் நான்கு கடல்கள் நிரம்பி வழியும்! மகனோ மகளோ வேறு எந்த உறவினராலோ ஒருவருடைய துன்பத்தைப் போக்க முடியாது. துன்பங்கள் இல்லாதது, பந்தங்கள் இல்லாதது, பிறவிகள் இல்லாதது, ஒப்புயர்வற்றது—நிர்வாணப் பேறு பெற்ற நிலையே ஆகும்'' என்று வாழ்க்கையைப் பற்றிய உண்மைகளை எடுத்துச் சொன்னார்.

கொடும் துன்பங்களும், செய்த பாவங்களும் கடும் வினைகளும் மெய்ஞானியின் கடைக்கண் பார்வை பட்ட மாத்திரத்திலேயே விலகி ஓடி விடும் என்பது படாசாராவின் விஷயத்தில் உண்மையே ஆயிற்று. படாசாராவின் மனம் தெளிந்தது. உலக வாழ்க்கையை, உள்ளது உள்ளபடியே காணும் பரிபக்குவ நிலையும் அவளுக்கு வந்தது. அதன் விளைவாக அவள் பிக்ஷுணியாக பௌத்த சங்கத்தில் சேர்ந்து துறவற வாழ்க்கையை மேற்கொள்ளும் பேறு பெற்றாள்.

படாசாரா, முதலாவது தரத்தைச் சேர்ந்த மிக உயர்ந்த பிக்ஷுணியாக துறவொழுக்கத்தை முழு அளவில் கைக்கொண்டாள். ஏராளமான தெய்வீகக் காட்சிகளைப் பெற்றவளாகவும், பௌத்த தத்துவங்களில் தேர்ந்தவளாகவும் ஆனாள். அர்ஹத் என்று பௌத்தம் குறிப்பிடும் பரிபூரணம் அடையப்பெற்ற மகான்களில் ஒருவராகவும் ஆனாள்.

அவளுடைய பரிபூரண நல்லொழுக்கத்திற்காகவும், உயர்ந்த கடமை உணர்வுக்காகவும், பௌத்த சங்கம் படாசாரா என்ற பெயரை அவளுக்கு வழங்கியது. அவளுடைய தவ வாழ்க்கையையும் திறமைகளையும், பகவான் புத்ததேவரே பல சமயங்களில் மிகவும் புகழ்ந்து பேசியிருக்கிறார்.

படாசாராவிடம் முப்பது பிக்ஷுணிகள் பயிற்சிபெற்று பெருநிலையை அடைந்தார்கள். தானும் தெய்வமாகி பிறரையும் தெய்வ நிலைக்கு உயர்த்திய படாசாராவுக்கு, பௌத்த சங்கத்தின் வரலாற்றிலே என்றென்றும் புகழிடம் உண்டு.

**— சத்தியகாமன்**



## தமிழ்வாணன் சொல்கிறார்

**மயிலாப்பூர்** ஸ்ரீ ராமகிருஷ்ண மடம் 'ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்' என்ற மாதப் பத்திரிகையை 57 ஆண்டுகளாக நடத்தி வருகிறது. இது விவேகானந்தரின் குரல். தமிழகத்தில் வெளிவரும் ஆன்மீகத் தெய்விகப் பத்திரிகைகளிலேயே சிறந்த பத்திரிகை **ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்**தான். பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரும் விவேகானந்தரும் இல்லாவிட்டால் இந்து மதமும் ஆன்மீகமும் அடியோடு போயிருக்கும். பகவான் இராமகிருஷ்ணரின் திருக் கருத்துக்களைத் தாங்கிவரும் ஸ்ரீராமகிருஷ்ண விஜயத்தை இந்துக்கள் படித்து இந்து மதத்தை இவ்வுலகில் இணையிலா மதமாக்க வேண்டும்.

நன்றி: 'கல்கண்டு' [18-8-77]

# பரமாத்மா

**(ஸ்ரீராமபிரானின் அருளுரை)**

ஸ்ரீராமர் ஹனுமானைப் பார்த்து, ''பரமாத்மாவினுடைய சாயையேதான் எல்லா பிராணிகளிடமும் ஜீவாத்மாவாகப் பிரதிபலிப்பதை நீ பார்க்கிறாய். ஏரி அல்லது நதி ஒவ்வொன்றிலும் விரிந்த வானம் பிரதிபலிப்பதை நீ பார்க்கிறாய் அல்லவா?'' என்று சொல்லி இருக்கிறார்.



பரமாத்மாவானது சலனம் இல்லாமல் இருக்கும் ஆகாயம் போன்றது. அதனுடைய பிரதிபிம்பங்கள் நிரந்தரமானவைகள் அல்ல. ஆகாயம் மட்டுமே உண்மையாக இருப்பதைப் போல பரமாத்மா ஒன்று மட்டுமே சத்வஸ்துவாக இருந்து கொண்டிருக்கிறது. பரமாத்மாவே பரப்பிரம்மமும் ஆகும். காட்சிக்குப் புலனாகவும் எல்லா உயிர்களும் அதனுடைய பிரதிபிம்பங்களே ஆகும்.

* * *

நான் பரமாத்மா ஆவேன். நீ என்னுடைய பிரதிபிம்பம் ஆவாய். இப்போது நான் உனக்குச் சொன்ன பரமரகசியத்தை, என்னிடம் பக்தி இல்லாதவர்களுக்கு ஒரு போதும் வெளியிடாதே. ஒரு ராஜ்யமே உனக்குப் பதிலாகக் கொடுக்கப்பட்டாலும்கூட அந்த இரகசியத்தை அவர்களிடம் வெளியிடாதே. நான் உனக்குத் தரக்கூடிய நல்ல போதனை இதைவிட பெரியதாக ஒன்று இல்லவே இல்லை.

* * *

கயிறு — பாம்பு நியாயத்தில் கயிறு ஒன்று மட்டுமே உண்மை. பாம்பு உண்மையாகாது. அதைப்போல பரமாத்மாவே சத்தியம். இந்த ஜகத் வெறும் மித்தை. மனிதனுடைய காட்சியிலும் கேள்வியிலும் சிந்தனைகளிலும் ஜகத் சத்தியம்போல தோன்றுகிறது. ஆனால் கனவில் காணப்படும் பொருள்கள் எவ்வளவு நேரம் நிலைத்திருக்கின்றனவோ, அவ்வளவே நேரம்தான் ஜகத்தும் நிலைத்திருக்கிறது.

* * *

இந்திரியங்கள், மனம், பிராணன் ஆகிய எல்லாவற்றிலிருந்தும் ஆத்மா முற்றிலும் வேறுபட்டது. இதில் சந்தேகமே வேண்டாம். ஆத்மா ஆனந்தமயமானது, பரமானது, அத்வைதமானது, சாசுவதமானது, அருவமானது, பாவம் இல்லாதது, பரிசுத்தமானது. இந்த உணர்வு உறுதியாக உனக்கு ஏற்படுகிற கணத்திலேயே நீ முக்தன் ஆகிவிடுவாய்.

* * *

உன்னுடைய குருவின் ஞானோபதேசத்தை முழு அளவில் நம்பிக்கையுடன் சிரவணம் செய்வதன் மூலம், ஜீவ—பிரம்ம ஐக்கியத்தை அனுபவமாக்கிக்கொள்ள முயற்சி செய். சத்குருவின் போதனை **தத் த்வம் அஸி** என்பதுதான். நீயே அதுவாக இருக்கிறாய் என்பதுதான். ஆனால் நீ இந்த நிலையை அடைவதற்கு உனக்குக் குருவின் கிருபை மிக மிக அவசியம் என்பது உண்மை.

* * *

குருவின் கிருபையைப் பெறும் பாக்கியம் கிடைக்க வேண்டுமானால் முதலில் தத் த்வம் அஸி என்ற வாக்கியத்தின் பொருளை நீ புரிந்து கொள்ள வேண்டும். தத் என்பது பரமாத்மாவைக் குறிக்கும். த்வம் என்பது ஜீவாத்மா ஆகும். அஸி என்றால் இருக்கிறாய் என்பது பொருள். ஆகவே பரமாத்மா, ஜீவாத்மா ஆகிய இரண்டும் ஒன்றுதான் என்று அந்த வாக்கியம் கூறுகிறது. இவ்விதம் பரமாத்மாவும் ஜீவாத்மாவும் ஒன்றே ஆவதால் அவை இரண்டையும் வேறுபடுத்த முடியாது. அவை இரண்டுக்கும் தனித் தனியாக குணங்களை ஏற்றிச் சொல்வதும் பொருந்தாது.

* * *

உடல் பஞ்சபூதங்களால் ஆகியது. அது வரம்புக்கு உட்பட்டது. அழியக்கூடியது. அது ஆத்மாவில் இருந்தும் முற்றிலும் வேருனது. ஆத்மாவுக்கு ஆதியும் இல்லே, அந்தமும் இல்லே இந்த உடல் அந்த ஆத்மாவால் படைக்கப்பட்டதே ஆகும். இந்த உண்மையை நன்ருகச் சிந்தனே செய்து ஆத்மாவை அறிந்துகொள்ள முயற்சி செய்வாயாக.

* * *

இதுவல்ல, இதுவல்ல என்று ஆராய்வதன் (நேதி நேதி மார்க்கம்) மூலம் ஆத்மா என்பது நிச்சயமாக இன்னதுதான் என்பதை நீ கண்டு உணர முயற்சி செய்ய வேண்டும். உலகம் என்பது நன்மையும் தீமையும் கலந்தது. இந்த உலகத்தை ஆழ்ந்து சோதித்துப் பார்த்து அதனுடைய சாரமான பகுதியைக் கிரகித்துக் கொள்ள வேண்டும். எஞ்சிய சாரமில்லாத பகுதியைத் தவிர்த்துவிட வேண்டும். இது, மாம்பழத்தின் இனிப்பான ரசத்தை எடுத்துக் கொண்டு அதன் கொட்டையைத் தூர எறிந்து விடுவதைப் போல ஆகும்.

ஆத்மாவுக்குப் பிறப்பு இறப்புக் கிடையாது. ஆத்மாவுக்குப் பாலியம், இளமை, மூப்பு முதலிய நிலேகளும் கிடையாது.

* * *

ஆத்மா பரிபூரண ஆனந்தமானது. இத்தகைய ஆத்மாவில் துன்பம் நிறைந்த சம்ஸாரம் இருப்பதாக நீ ஏன் நினேக்க வேண்டும்? ஆத்மாவில் துன்பம் இருப்பதாக நீ உணர்வதற்குக் காரணம் உன்னுடைய அறியாமையே ஆகும். ஞானேதயம் ஏற்பட்ட உடனேயே இந்தத் தவருன உணர்வு உன்னேவிட்டு மறைந்து போகும்.

* *

உண்மையில் இல்லவே இல்லாத ஒன்றை நீ இருப்பதாக நினேப்பதற்குக் காரணம், உன்னுடைய அறியாமையே ஆகும். ஒரு கயிறைப் பாம்பு என்று நீ கற்பனே செய்து கொள்வது போலவே ஆகும். உண்மை இல்லாத ஒன்றை உண்மையான ஒன்று என்று கருதுவது அத்யாஸம் எனப்படும். சச்சிதானந்த சொருபியான ஆத்மா இத்தகைய மோகத்தாலும், பிரமையாலும் பாதிக்கப்படுவதே இல்லே.

* * *

இன்ப துன்பங்கள் ஆத்மாவைப் பாதிப்பதைப் போலத் தோன்றுவது எப்படி என்று உனக்குத் தெரியுமா? நெருப்பில் காய்ச்சப்படும் இரும்புத் துண்டு ஒன்று பார்ப்பதற்கு நெருப்பைப் போலவே தோன்றுகிறது அல்லவா? அதைப்போல, ஆத்மாவானது புத்தியில் பிரதிபலிக்கப்படும்போது, அது இன்ப துன்பங்களால் பாதிக்கப்படுவதாக நம்மை நினேக்கச் செய்கிறது. உண்மையிலோ ஆத்மா எந்தவிதத்திலும் பாதிக்கப்படுவதே இல்லே.

(தொடரும்)

* * *



## ஸ்ரீ ரமண மகரிஷி

காலே நேரத்தில் ஸ்ரீ ரமண பகவான், ஸ்டெல்லா (Estella) என்ற மகானின் போதனேயிலிருந்து ஒரு சிறிய பகுதியைப் படித்துக் காட்டினர். அது தமிழில் வெளிவரும் மாதப் பத்திரிகையான **ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயத்தில்** வெளியாகி இருந்தது. அந்தப் பகுதியில் சொல்லப்பட்ட கருத்தாவது: ''காமம், ஆசை முதலியவைகளே உன்னுடைய பகைவர்கள்.

உனக்குத் துன்பம் ஏதாவது செய்யப்பட்டிருக்கிறது என்று நீ உணர்ந்தால், உனது உள்ளத்துக்குள்ளேயே புகுந்து அதன் காரணத்தை, அதாவது துன்பம் ஏன் செய்யப்பட்டிருக்கிறது என்பதைக் கண்டு பிடி. அதன் காரணம் உனது உள்ளமாக இராமல் வெளியே இருக்காது. புறக் காரணங்கள் நாமாக நம்மீது சுமத்திக்கொள்ளும் விஷயங்களே ஆகும். உனக்கே நீ துன்பம் செய்து கொள்ள முடியாதென்ருல், காருண்ய மூர்த்தியாகிய இறைவன் எந்த விதத்திலாகிலும் உனக்குத் துன்பம் செய்வானு என்ன?''

ஸ்ரீ ரமண பகவான் மேலும் சொன்னர்: ''ஸ்டெல்லா ஓர் உத்தமப் பெரியார் ஆவார். அவருடைய போதனேகள் நல்ல சத்போதனேகள் ஆகும்.''

ஆதாரம்: Talks with Ramana Maharshi பக்கம்-297 ஐந்தாம் பதிப்பு.

# அருள் விருந்து

சுவாமி சாரதானந்தர்

## சுயமுயற்சியும் சரணுகதியும்

ஸ்ரீராமகிருஷ்ணருடைய உபதேசங்களில் முரண்பாடு எதுவும் இல்லை. அவர் அனைவருக்கும் ஒரே விதியை ஏற்படுத்துவதில்லை. தம்மிடம் வரும் மனிதனின் மன இயல்பை முதலில் அவர் நேரில் பார்ப்பார். பிறகு அதற்கேற்ற வகையிலே அறிவுரைகள் தருவார்.

அவருடைய உபதேசங்கள், பலவித மக்களுக்குப் பலவிதங்களில் அருளப்பட்டன. அதற்குக் காரணம், அவர்கள் பலவித மன இயல்புகளை உடையவர்களாகவும், கொள்கைகளை வாழ்க்கையில் நடைமுறைப்படுத்துவதில் பலவிதத் தகுதிகளைக் கொண்டவர்களாகவும் இருந்ததுதான்.



சுவாமி சாரதானந்தர்

இளமையும் சுறுசுறுப்பும் தீவிரமும் பெற்றவர்களாகவும், கொழுந்துவிட்டு எரியும் கடவுள் நாட்டம் கொண்டவர்களாகவும், சன்னியாச வாழ்க்கையை மேற்கொள்ளக்கூடிய மன அமைப்பு கொண்டவர்களாகவும்—அவருடைய காட்சிக்குத் தென்பட்ட சிலருக்கு அவர் சொன்ன ஆன்மிக ஊக்கம் தரும் உபதேசங்களாவது: ''பெயரையும் புகழையும் தேடித் திரியும் ஆசைகளை எல்லாம் புறக்கணித்து (அலட்சியம் செய்து) ஆத்ம சாதனங்களில் ஆழ்ந்து மூழ்கி இருப்பாயாக. கடவுளைப் பிரத்தியட்சமாக அனுபூதியில் உணர்ந்து மெய் ஞானம் பெற்ற நிலையை அடையும் வரையிலும் திருப்தி அடைந்து நின்றுவிடாதே.''

இத்தகைய மன நிலையைப் பெற்றவர்களின், உள்ளங்களில் புகைந்து கொண்டிருக்கும் ஞான அக்னியைக் கொழுந்து விட்டு எரியச் செய்வதற்காக, பின்வருமாறு அவர் உபதேசிப்பார்:

''துறவு இல்லாமல் பகவானை உணர முடியுமா? ஆன்மிக வாழ்க்கையின் எல்லைக்குள்ளே புக வேண்டுமானால், பெண், பொன் ஆசைகளைத் துறந்துவிடுவது என்பது மிக மிக இன்றியமையாத ஒரு தகுதியாகும். ஏக்கம், துன்பம், தொந்தரவு ஆகிய இவைகளைத் தவிர இந்த உலகிலே வேறு என்ன இருக்கிறது? உலகிலே இன்பமாக இருப்பவன் யார்? அதை எனக்குச் சொல்லு. நீ உலகத்தை நாடி, உலக விஷயங்களுக்காக ஆசைப்பட்டால், உலகம் உன்னைக் கீழே இழுத்து விட்டுவிடும். ஆனால் நீ ஆண்டவனை நாடி, அவருக்காக எல்லாவற்றையும் தியாகம் செய்தால், அவர் உன்னை உயர்த்துவது நிச்சயம். முடிவு என்பதே இல்லாத பேரின்பத்தை உனது உள்ளத்தில் அவர் நிறைப்பது சத்தியம்.''

வாழ்க்கைக்குரிய பாரமான பொறுப்புக்களைச் சுமந்தவர்களாகவும், பிறவி என்னும் வலையிலே சிக்கியவர்களாகவும் உள்ள முதியவர்களுக்குப் பின்வருமாறு அவர் உபதேசித்தார்:

''நான் உணவைச் சமைத்து ஒரு தட்டிலே தயாராக வைத்திருக்கிறேன். முன்னால் உட்கார்ந்து சாப்பிடுவது மட்டுமே உங்களுடைய வேலை. நீங்கள் ஒன்றும் செய்ய வேண்டியதில்லை. உணவை எடுத்து வாய் வரையிலும் உயர்த்திச் சாப்பிட்டு மகிழ்ச்சியாக இருப்பது மட்டுமே உங்களுடைய செயல். நான் உங்களுடைய பொறுப்பை ஏற்றுக்கொண்டு விட்டேன். நீங்கள் எந்த ஒரு ஆத்ம சாதனமும் பழக வேண்டாம். உங்களுக்காக நான் அதைச் செய்து முடித்திருக்கிறேன். நீங்கள் எனக்கு வக்காலத்துக் கொடுத்துவிட்டுக் கவலை இல்லாமல் இருப்பதே போதுமானது.''

ஞான சாதனங்களைப் பழகுவதற்கு அனுகூலமான வகையில் வசதிகள் அவர்களுக்கு இல்லாததாலும், அவைகளைப் பழகும்படி சொன்

னாலும், அவ்விதம் செய்யக்கூடிய திறமை அவர்களிடம் இல்லை என்பதையும் அவர் நன்கு அறிவார்.

அத்தகைய மக்களிடம் தம்மை நம்பி வாழும்படியும், பகவானிடம் சரண் புகுந்து வாழும்படியும் போதிப்பார்.

ஆனால் முழு அளவில் ஆண்டவனிடம் சரணாகதி செய்வதும், வக்காலத்தைக் கொடுத்துவிடுவதும் எவ்வளவு கஷ்டமானவைகள் என்பதை, கிரிஷ் சந்திர கோஷுக்கும் ஸ்ரீராமகிருஷ்ணருக்கும் உள்ள தொடர்பைப் படித்தவர்கள் அறிவார்கள்.

பிற்காலத்தில் ஒரு முறை கிரிஷ் கோஷைக் கேட்டபோது அவர் பின்வருமாறு கூறினார்: ''இன்னும் நான் தெரிந்துகொள்ள வேண்டியது அதிகம் இருக்கிறது. சரணாகதி என்பதற்கு, அவ்வளவு ஆழ்ந்த அர்த்தம் உள்ளது என்பதை நான் கனவிலேனும் அறிந்ததுண்டா? சாதாரண ஆத்ம சாதனத்துக்கு ஏதோ ஒரு காலத்தில் முடிவு உண்டு என்பதையும், ஆனால் இந்தச் சரணாகதிக்கோ முடிவே கிடையாது என்பதையும் நான் இப்போது பார்க்கிறேன். கவனமாகவும் எப்போதும் விழிப்பாகவும் இருக்க வேண்டும்; மிக அற்பமான நினைவாகிலும் செயலாகிலும் பகவானின் தூண்டுதலால் நம்மிடம் எழுகிறதா, அல்லது நமது அகங்காரத்தால் கிளம்புகிறதா என்பதை ஒவ்வொரு கணமும் ஆராய்ந்துகொண்டே இருக்க வேண்டும்.''

இப்போதுள்ள சந்தர்ப்பத்தில் நீங்கள் செய்ய வேண்டியது இன்னது என்பதைப் பற்றி என்னைக் கேட்டிருக்கிறீர்கள். நான் சொல்லும் புத்திமதி இதுதான்: ''ஞான சாதனங்களைப் பழகுங்கள். உங்களால் இயன்ற அளவுக்கு ஜபமும் தியானமும் செய்யுங்கள். நீங்கள் இளைஞர். இன்னும் பல ஆண்டுகள் வாழ்க்கையில் உங்களுக்கு உள்ளன. நீங்கள் பாடுபடுவீர்களானால், உங்களுடைய இலட்சியத்தை அடைந்துவிடுவீர்கள். இடைவிடாமல் உழைப்பதற்குச் சரியான பருவம் இதுதான். ஆதலால் ஒரே ஒரு வினாடியையும் வீணாக்க வேண்டாம். இந்த அருமையான சமயத்தை நழுவவிட்டு விடாதீர்கள். இப்போது அதை நீங்கள் அலட்சியம் செய்துவிட்டால், பிற்கால வாழ்க்கையில் நீங்கள் மிகவும் வருந்துவீர்கள்.''



கீதையிலே பகவான் சொன்னதை ஞாபகம் வைத்துக் கொள்ளுங்கள். ''ஒருவன் தனது சக்தியைக் கொண்டே ஆத்மாவின் மீதுள்ள மறைப்பை நீக்கட்டும். ஆத்மாவை மறைக்க முற்பட வேண்டாம். மனிதனின் சங்கல்பமே ஆத்மனுக்கு உறவினன் ஆகும்; அதுவே ஆத்மனுக்குப் பகையும் ஆகும்.''

## உணவு பற்றிய விதிகள்

ஆன்மிக வாழ்க்கையில் ஈடுபடுவதற்குத் தாவர உணவு முற்றிலும் இன்றியமையாததா என்று என்னை நீங்கள் கேட்கிறீர்கள். இதற்கு என்னுடைய பதில், உணவைப் பற்றிய கண்டிப்பான ஒரு விதியை ஏற்படுத்த முடியாது என்பதுதான்.

ஏதாவது ஒரு வகை உயிருக்கு ஊறு விளைவிக்காமல் நம்மால் வாழ முடியுமா? செடிகளுக்கும் காய்கறிகளுக்கும் உயிர் இல்லை என்று நீங்கள் நினைக்கிறீர்களா? அவைகளுக்கும் உயிர் உண்டு என்று நமது சாஸ்திரங்கள் கூறியுள்ளன. இந்த உண்மையை மேலை நாட்டு விஞ்ஞானமும் உறுதிப்படுத்தியிருக்கிறது.

தாவர உணவைக்கொண்டே உங்களுடைய உடல், மனம் ஆகியவைகளின் வலிமையையும் சுறுசுறுப்பையும் பாதுகாத்துக்கொள்ள முடியுமானால், அப்படியே செய்வதற்கு உங்களுக்குப் பரிபூரண சுதந்திரம் உண்டு. ஆனால் மீனையும் புலாலையும் மறுத்துவிடுகிற ஒரு காரணத்தாலேயே உங்கள் உடல் நலம் குறையவும், நோயை எதிர்க்கும் வலிமை குறையவும் செய்யுமானால், அத்தகைய கருத்துக்களை நீங்கள் கைவிட்டு, கடுமை இல்லாமல் மிதமான நடுநிலைமையைப் பின்பற்ற வேண்டும். ஏனென்றால், பொதுவாக உடல் பலவீனம் அடையும்போது மனமும் பலவீனம் அடைந்துவிடும். வலிமையற்ற மனம் தியானத்துக்கு ஏற்றதாக இருக்காது. அப்படிப்பட்ட மனதோடு ஒருவன் தியானம் பழக முயற்சி செய்யும்போது, அவனது மனம் ஓடிக்கொண்டே இருக்கும். போதிய வலிமை படைத்த ஒருவனால்தான், தனது மனதை ஒருமுகப்படுத்திக் கடவுளின் மீது நிலைநாட்ட முடியும். ஆகவே உங்களுடைய ஆன்மிக முன்னேற்றத்திற்குக் கேடு விளைவிக்கக்கூடிய எதையுமே நீங்கள் செய்யக் கூடாது.

ஆனால், உணவைப் பற்றிய சில விதிமுறைகளை நீங்கள் பின்பற்ற விரும்பினால், உங்களுக்கு நான் சொல்லக்கூடிய ஒரே ஒரு யோசனை இதுதான். நீங்கள் எதைச் சாப்பிடுவதாக இருந்தாலும், அதை ஆண்டவனுக்கு நைவேத்தியம் செய்துவிடுங்கள். பசி என்னும் தீ வடிவில் பகவான் உடலில் உறைவதாகவும், நீங்கள் சாப்பிடுபவைகள் எல்லாம் அந்தப் புனித நெருப்புக்கு ஆகுதியாக அளிக்கப்படுவதாகவும் நீங்கள் நினைக்க வேண்டும். அவரது ஆணைப்படி நீங்கள் உங்களுக்குள்ளேயே ஒரு யாகத்தை நடத்துகிறீர்கள். இத்தகைய எண்ணத்துடன் செய்வதால் சாப்பிடுவது என்னும் ஸ்தூல வடிவமான செயல் ஒரு வைதிகக் கிரியையாக மாறிவிடுகிறது. அதோடு உயிருக்கு நீங்கள் விளைவிக்கும் கேட்டைப் பற்றிய சந்தேகமும் நீங்கிவிடும். ஆனால் இத்தகைய மன நிலையை உள்ளத்தில் உறுதியாக நிலை நிறுத்துவது எளிய காரியம் அல்ல. அதற்கு அகமுகப்பட்ட தியான வாழ்க்கையும் மன நேர்மையையும் முறையாகப் பழகுவது அவசியம்.

இந்தக் காரணத்தால்தான், நமது நாட்டுத் துறவிகள் சாப்பிடுவதற்கு முன்பு, எப்போதும் கீதையிலிருந்து பின்வரும் சுலோகத்தைச் சொல்வதை வழக்கமாகக் கொண்டிருக்கிறார்கள்: ''அர்ப்பணம் பிரம்மம். அர்ப்பிக்கப்படும் பொருளும் பிரம்மம். அக்கினியாகிய பிரம்மத்தில் பிரம்மத்தாலேயே ஹோமம் செய்யப்படுகிறது. கர்மமாகிய பிரம்மத்தில் சமாதி எய்தும் அவனால் பிரம்மமே அடையப்படும் பொருள் ஆகிறது'' — கீதை 4—24

* * *



# மனிதன் தனது விதியைத் தானே அமைக்கிறான்

**சுவாமி விவேகானந்தர்**

1

உலக இயந்திரத்தின் சக்கரங்களிலிருந்து தப்பி ஓடாதே. மாறாக அதன் உள்ளேயே நின்றுகொண்டு கர்ம யோகத்தின் இரகசியத்தைக் கற்றுக்கொள். இயந்திரத்தின் உள்ளேயிருந்து சரியானபடி வேலை செய்வதன் மூலமும் அதிலிருந்து வெளியே வந்துவிடுவது சாத்தியமே.

2

நாம் நினைக்கும் ஒவ்வோர் எண்ணமும், நாம் செய்யும் ஒவ்வொரு காரியமும், குறிப்பிட்ட ஒரு காலத்திற்குப் பிறகு சூட்சுமத் தன்மையை அடைகிறது. பின்பு அது வித்து வடிவத்தைப் பெற்று மறைந்திருக்கும் நிலையில் நமது சூட்சும சரீரத்தில் வாழ்கின்றது. மீண்டும் சிறிது காலத்திற்குப் பிறகு அது வெளிப்பட்டு வந்து தனக்குரிய பலன்களைத் தருகின்றன. இந்தப் பலன்களே மனிதனுடைய வாழ்க்கையை நிர்ணயிக்கின்றன. இவ்விதம், மனிதன் தனது வாழ்க்கையைத் தானே உருவாக்கிக் கொள்கிறான். தனக்குத் தானே அமைத்துக் கொள்ளும் விதிகளைத் தவிர, வேறு எதற்கும் மனிதன் கட்டுப்பட்டவன் அல்ல.



3

என்னுடைய இலட்சியத்தை, உண்மையில் ஒரு சில சொற்களில் சொல்லி முடித்து விடலாம். அதாவது, மக்களுக்கு அவர்களுடைய தெய்விகத் தன்மையை எடுத்துப் போதிப்பதும், வாழ்க்கையின் ஒவ்வோர் இயக்கத்திலும் அதை எப்படி வெளிப்படுத்திக் காட்டுவது என்பதை எடுத்துச் சொல்வதும்தான் அது.

4

தூய்மை, பொறுமை, விடாமுயற்சி ஆகிய இம்மூன்றும் வெற்றிக்கு இன்றியமையாதவை களாகும். அதோடு இவைகள் அனைத்திற்கும் மேலாக அன்பு இருந்தாக வேண்டும்.

5

எப்போதும் விரிந்து மலர்ந்துகொண்டே இருப்பதுதான் வாழ்க்கையாகும். சுருங்கி விடுவது மரணம்தான். தன்னுடைய சொந்த சுகவசதிகளை மட்டும் கவனித்துக்கொண்டு, சோம்பல் வாழ்க்கை வாழும் சுயநலக்கார னுக்கு நரகத்தில்கூட இடம் கிடைக்காது.

6

ஆண்டவனல் தனக்குக் கொடுக்கப்பட் டுள்ள அறிவாற்றலைப் பயன்படுத்தாமல், கண் மூடித்தனமாக நம்புபவனை மன்னிப்பதைவிட, தன்னுடைய பகுத்தறிவை முறையாகப் பயன் படுத்தி நம்பாமலிருக்கும் ஒருவனை கடவுள் மன்னித்து விடுவார் என்று நான் உறுதியாக நம்புகிறேன்...

நாம் பகுத்தறிவைப் பயன்படுத்தி ஆராய்ந்து பார்க்க வேண்டும். ஒவ்வொரு நாட்டிலுள்ள புராதன நூல்களிலும் கூறப்பட்டிருக்கிற தீர்க்க தரிசிகள், பெரியோர்கள் ஆகியவர்களைக் குறித்த உண்மைகளை நமது பகுத்தறிவானது உண்மை என்று ஏற்றுக்கொள்ளும்போது, அவர்களிடம் நாம் நம்பிக்கை வைக்கலாம்; அதன் பின்பு அத்தகைய தீர்க்கதரிசிகளை நாம் நம்மிடையே பார்க்கும்போது அவர்களிடம் நம்பிக்கை வைப்போம். குறிப்பிட்ட ஒரு சில கொள்கைகளுக்கு எடுத்துக் காட்டுகளாகத் தான் அவர்கள் விளங்குகிறுர்களே தவிர, அவர்கள் விநோதமான மனிதர்கள் அல்லர் என்பதை அப்போது நாம் புரிந்து கொள் வோம்.

7

உன்னுடைய குறிக்கோளை அடைவதற்கு நீ ஏன் முயற்சி செய்யக்கூடாது? தோல்வி யின் மூலம் மேலும் நாம் புத்திசாலிகளாகி றோம். காலம் எல்லையற்றது. இதோ இந்தச் சுவரைப் பார். இந்தச் சுவர் எப்போதாகி லும் பொய் பேசியிருக்கிறதா? ஆனுலும் அது எப்போதும் ஒரு சுவராகத்தான் இருந்து கொண்டிருக்கிறது.

மனிதன் பொய் பேசுகிறுன் — ஆனல் அவனே பிறகு ஒரு தெய்வமாகவும் ஆகிவிடு கிறுன். ஏதாகிலும் ஒன்றைச் செய்வது மேல். அது தவருகவே இருந்தாலும்கூட அதை நீ பொருட்படுத்த வேண்டியதில்லை. ஒன்றுமே செய்யாமலிருப்பதைவிட அது எவ்வளவோ மேலானது. பசு ஒருபோதும் பொய் சொல்வ தில்லை. ஆயினும் காலமெல்லாம் அது ஒரு பசுவாகத்தான் இருக்கிறது. ஏதாவது ஒன் றைச் செய்!

8

தொடர்ந்து புனிதமான எண்ணங்களையே சிந்தித்தபடி நன்மையைச் செய்து கொண்டிரு. தீய சம்ஸ்காரங்களைத் தலை காட்டாதபடி அழுத்தி வைப்பதற்கு அது ஒன்றே ஒன்றுதான் வழி.

எப்போதும் எந்த மனிதனையும் உருப் படாதவன் என்று சொல்லாதே. ஏனென்றுல், அவன் ஒருவித பழக்க வழக்கங்களின் தொகுப் பாக, குறிப்பிட்ட ஓர் ஒழுக்கத்தின் அடை யாளமாக மட்டும்தான் விளங்குகிறுன். அவ னிடமுள்ள பழைய குணங்களை மேலும் சிறந்த புதிய பழக்க வழக்கங்களால் தடுத்துவிட முடியும்.

ஒழுக்கம் என்பது மீண்டும் மீண்டும் செய் யப்படும் பழக்கங்களால்தான் உருவாகிறது. எனவே மேலும் மேலும் மேற்கொள்ளும் பழக் கங்களால்தான் ஒழுக்கத்தை மேலும் சிறந்த தாகச் சீர்ப்படுத்தி அமைக்க முடியும்... பிரம்ம சரியம் அனுஷ்டிப்பவனுடைய மூளைக்கு அபார மான ஆற்றலும் அதீதமான மனே வலிமையும் உண்டு.

9

இடையருத பயிற்சியின் மூலம் கஷ்டங்களை நாம் வெல்ல முடியும். எளிதில் பாதிக்கப்படும் வகையில் நம்மை நாமே விட்டு வைத்தாலன்றி, நமக்கு எதுவும் நேர்ந்துவிட முடியாது என் பதை நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

10

நான் ஒரு சமயம் இமயமலைப் பகுதியில் பிரயாணம் செய்து கொண்டிருந்தேன். நெடுஞ் சாலை ஒன்று எங்கள் முன்பு நீண்டு இருந்தது. ஏழைத் துறவிகளாகிய எங்களைத் தூக்கிச்

செல்வதற்கு ஆள் வைப்பது எங்களுக்கு இயலாத காரியம்.

எனவே, வழி முழுவதும் நாங்கள் நடந்தே செல்ல வேண்டியிருந்தது. எங்கள் கூட்டத்தில் வயோதிகரான கிழவர் ஒருவர் இருந்தார். அவர், ''ஐயோ, இதை எப்படிக் கடந்து செல்வது? இதற்கு மேல் ஒரு அடியும் என்னால் நடக்க முடியாது! என் நெஞ்சு வெடித்துவிடும் போல் இருக்கிறது'' என்று சொன்னார்.

'கீழே குனிந்து உங்கள் கால்களைப் பாருங்கள்' என்று நான் சொன்னேன். அவரும் அவ்விதமே நான் சொன்னபடி செய்தார். பிறகு அவரிடம் நான், ''இப்போது உங்கள் கால்களின் கீழ் உள்ள இந்தப் பாதை, ஏற்கனவே நீங்கள் கடந்து வந்த சாலையாகும். மேலும் அதே சாலையைத்தான் நீங்கள் உங்கள் முன்னால் பார்த்துக் கொண்டிருக்கிறீர்கள்.... விரைவில் அதுவும் உங்கள் கால்களின் கீழ் வந்து விடப் போகிறது'' என்று கூறினேன்.

மிக உயர்ந்த பொருள்களெல்லாம் உங்கள் காலடியின் கீழ் இருக்கின்றன. ஏனென்றால், உண்மையில் நீங்கள் தெய்வீக நட்சத்திரங்களாக இருந்து கொண்டிருக்கிறீர்கள்.

**11**

கோழைகளும் முட்டாள்களும் 'இதுதான் விதி' என்று சொல்வார்கள் என்பதாக சம்ஸ்கிருத பழமொழி ஒன்று சொல்கிறது. ஆனால் வலிமை உடைய மனிதனே எழுந்து நின்று, 'என்னுடைய தலைவிதியை நானே அமைத்துக் கொள்வேன்' என்று சொல்கிறான். வயதாகி மூப்பு நிலையை அடைந்து கொண்டிருப்பவர்கள் தான் விதியைப் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். இளைஞர்கள் பொதுவாக ஜோதிடத்தின் பக்கம் வருவதில்லை.

**12**

ஒருவனுடைய இயல்பு எப்படிப்பட்டது என்பதை உண்மையில் நீ தீர்மானிக்க விரும்பினால், அவன் செய்யும் பெரிய காரியங்களைக் கவனிக்காதே.

ஒவ்வொரு முட்டாளும் ஒரு சமயம் இல்லாவிட்டால் மற்றொரு சமயம் வீரனாகிவிடுவான். ஒரு மனிதனை அவன் செய்யும் மிகச் சாதாரணமான காரியங்களின்போது நீ கவனித்துப் பார்க்க வேண்டும். ஏனென்றால் இத்தகைய சாதாரண செயல்கள்தான், பெரிய மனிதன் ஒருவனுடைய உண்மையான இயல்பினை உனக்குத் தெரிவிப்பதாக இருக்கும். வாய்ப்புகள் மிகப் பெருமளவில் கிடைக்கும் போது, மிகத் தாழ்ந்த மனிதன்கூட ஏதோ ஒரு வகையான உயர்ந்த நிலைக்கு உயர்த்தப்பட்டு விடுகிறான். ஆனால் எங்கிருந்தாலும், யாருடைய இயல்பு எப்போதும் ஒரே மாதிரியான பெருந்தன்மை உடையதாக இருக்கிறதோ, அவன்தான் உண்மையில் மிகப் பெரிய மனிதனாவான்.

**13**

பிரதிபலன் எதையும் சிந்திக்காமல், நாம் உலகிற்குச் செலுத்தும் ஒவ்வோர் நல்லெண்ணமும் நமக்குள் சேகரித்து வைக்கப்படுகிறது. அத்தகைய நல்ல எண்ணங்கள் நமது கர்ம சங்கிலியை இணைக்கும் கண்ணி ஒன்றை உடைத்தெறிகிறது. மக்களுள் மிகவும் தூயவர்களாகும்வரை மேலும் மேலும் அது நம்மைத் தூய்மைப்படுத்திக்கொண்டே இருக்கிறது.

**14**

பகை, பொறாமை ஆகியவைகளை நீ வெளியிட்டால், அவை வட்டியும் முதலுமாய் மீண்டும் உன்னிடமே திரும்பி வந்து சேர்ந்துவிடும். வேறு எந்தச் சக்தியாலும் அவைகளைத் தடுத்து நிறுத்த முடியாது. ஒரு முறை நீ அவைகளை இயங்கும்படி செய்து விட்டால், அதனால் வரும் விளைவையும் நீ ஏற்றே ஆகவேண்டும். இதை நீ நினைவில் வைத்துக் கொண்டால், தீய செயல்களைச் செய்வதிலிருந்து அது உன்னைத் தடுத்து நிறுத்தும்.

**15**

இயற்கையை எதிர்த்துப் போராடும் எல்லாவற்றிலும் உயிர் உணர்ச்சி இருக்கிறது. இத்தகைய எதிர்ப்பு உள்ள இடத்தில் உயிர் வாழ்வதற்கான அறிகுறி வெளியாகிறது. ஒரு சிற்றெறும்பைக் கொல்வதற்கு நீ முயற்சி செய்தால், அதுகூடத் தனது உயிரைக் காப்பாற்றிக் கொள்வதற்காக உடனே எதிர்த்து நிற்கும். எங்கு போராட்டம் இருக்கிறதோ, எங்கு எதிர்ப்பு இருக்கிறதோ, அங்கு உயிர் இருப்பதற்குரிய அடையாளம் இருக்கிறது. உயிர் வாழ்வதற்கான உணர்ச்சி அங்கு வெளிப்படுகிறது.





# ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004

**(16—9—77 முதல் 15—10—77 வரை)**

ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சங்கம் ஆகியவைகளின் பொதுத் தலைவர் **ஸ்ரீமத் சுவாமி வீரேஸ்வரானந்தஜி மகராஜ்** அவர்கள், செப்டம்பர் 14 முதல் 20 வரையிலும் சென்னை ஸ்ரீராம கிருஷ்ண மடத்தில் தங்கியிருப்பார்கள். அந்நாட்களில் அவர் மாலை ஆரதிக்குப் பிறகு பக்தர்களை சந்திப்பார்.

**சத் சங்கம்:** ஞாயிறுதோறும் — மாலை 4 மணி முதல் 8 மணி வரை

மாலை 4 முதல் 4.20 வரை — ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாம பாராயணம் (2—10—77)
ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம பாராயணம் (9—10—77)

மாலை 4.20 முதல் 4.30 வரை — தியானம்

மாலை 4.30 முதல் 5.30 வரை — சொற்பொழிவு (தமிழ்)
1. **ஸ்ரீமத் பாகவதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம் (2-10-77)
2. **ஸ்ரீ விஷ்ணு ஸஹஸ்ரநாமம்**
திரு V. R. கல்யாணசுந்தர சாஸ்திரிகள் (9-10-77)

மாலை 5.35 முதல் 6.30 வரை — சொற்பொழிவு (ஆங்கிலம்)
**ஸ்ரீமத் பகவத்கீதை**—சுவாமி கபீரானந்தர்

**சிறப்புச் சொற்பொழிவுகள்:**
சனி மாலை 5.45 மணிக்கு
1. **ஸ்ரீமத் பாகவதம்**—சுவாமி கோலோகானந்தர் (24-9-77 & 15-10-77)
2. **இராமாயணத்தில் ஆராய்ச்சி**
திரு. பி. ராமகிருஷ்ணன் (27—9—77)
3. **நாராயணீயம்**—திரு. க. கோதண்டராமன் (8—10—77)

**வார நாட்களில் நடைபெறும் உரை நிகழ்ச்சிகள்**—(மாலை 5.45) (அக்டோபர் முதல் மாலை 5.30)

திங்கள்: (ஆங்கிலம்) ஈசாவாஸ்ய உபநிஷதம்—சுவாமி கீர்த்திதானந்தர் (இரவு 7 மணிக்கு)

செவ்வாய்: (ஆங்கிலம்) **ஸ்ரீமத் அத்யாத்ம ராமாயணம்**—சுவாமி கபீரானந்தர்

புதன்: (தமிழ்) **மகாபாரதம்**—திரு 'அண்ணு' சுப்ரமண்யம்

வியாழன்: (ஆங்கிலம்) **ஸ்ரீமத்பாகவதம்**—சுவாமி கோலோகானந்தர் (29—9—77 & 13—10—77)
தியாகப் பிரம்மம் (தெலுங்கு)
—சுவாமி சுவாத்மானந்தர் (22—9—77 & 6—10—77)

வெள்ளி: (தமிழ்) **ஸ்ரீ ராமகிருஷ்ணரின் உபதேசங்கள்**
—பிரம்மசாரி நிரஞ்ஜன சைதன்யா

வெள்ளி: (ஆங்) **ஸ்ரீமத் பகவத்கீதை** மாலை 6.30—சுவாமி கோலோகானந்தர்
(ஸ்ரீராமகிருஷ்ண மந்திரம், 18, தெற்குமாட வீதி, திருவல்லிக்கேணி.)

**விசேஷ தினங்கள்:**
அந்தர் யோகம் (சாதனை தினம்)—ஞாயிறு (25—9—77)
விநாயக சதுர்த்தி—வெள்ளி (16—9—77)
ஸ்ரீமத் சுவாமி அபேதானந்தர் ஜயந்தி—வியாழன்(6-10-77)
ஸ்ரீமத் சுவாமி அகண்டானந்தர் ஜயந்தி—புதன் (12-10-77)
மாஹாளயா—புதன் (12—10—77)
நவராத்ரி (13—10—77 முதல் 21—10—77 வரை)
ஸ்ரீராமநாம சங்கீர்த்தனம்: **ஏகாதசி தினங்களில்**
ஆரதிக்குப் பிறகு (23—8—77 & 9—10—77)

தேவை ஏற்படுமானல் சில சமயங்களில் உரை நிகழ்ச்சியின் தலைப்பு, பேச்சாளர் மாற்றம் செய்யப்படும்.

அனைவரையும் அனைத்து நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுமாறு அன்புடன் அழைக்கிறோம்.

தலைவர்,

தொலைபேசி: **71231** — **ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை-600 004**

# ஒரு வேண்டுகோள்

★ அன்பர்கள் தங்களுடைய சந்தாவைச் செலுத்துவதுடன், மேலும் சிலரை சந்தாதாரர்களாகச் சேர்த்துத் தருவது ஒரு நல்ல தொண்டாகும். இதன் மூலம் நமக்கும் மற்றவர்களுக்கும் நாம் நன்மையைச் செய்து கொள்கிறோம்.

★ தனிப்பிரதி விற்பனையோ, சந்தா சேர்க்கும் ஏஜண்டுகளோ குறிப்பிடத் தக்க அளவுக்கு இல்லாததால், வாசக அன்பர்களே நண்பர்களைச் சந்தா தாரர்களாக்கி ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

★ ஒவ்வொரு ஆண்டும் சந்தாவைச் செலுத்திப் புதுப்பிப்பதற்குப் பதிலாக, எப்போதும் பத்திரிகை வந்து கொண்டிருக்கும் வகையில் ஆயுள் சந்தா தாராகச் சேர்ந்து விடுவது நலம். ஆயுள் சந்தாதாரராக வசதி இல்லாத அன்பர்கள், சில ஆண்டுகளுக்குச் சேர்ந்தாற்போலவும் சந்தாவை முன்னதாகச் செலுத்தலாம்.

★ சந்தாதாரர்களை அதிகப்படுத்துவதில் தீவிர முயற்சி செய்து வருகிறோம். அன்பர்கள், தங்களின் பங்காக இந்தத் தெய்விகக் கைங்கரியத்தில் கல்வி ஸ்தாபனங்கள், சத்சங்கங்கள் முதலியவைகளுக்குப் பத்திரிகை போய்க்கொண்டிருக்கும்படி செய்யலாம். இது மாதந்தோறும் தாங்கள் அளிக்கும் மேலான நன்கொடையாகும்.

★ நண்பர்களுக்கும், அபிமானிகளுக்கும் பத்திரிகை போகும்படி செய்தால் ஒவ்வொரு மாதமும் அவர்களுக்கு நல்ல வெகுமதி அளித்ததாக அமையும்.

★ பந்துக்களுக்கும், குமாரத்திகளுக்கும் பத்திரிகை அனுப்பச் செய்தால் மாதந்தோறும் தங்களை ஞாபகப்படுத்தும் சிறந்த சன்மானமாகும்.

★ பெரியோர்கள், இந்த வேண்டுகோளைத் தங்களுக்கு ஏதோ சம்பந்தமில்லாதது என்று புறக்கணித்துவிடாமல், மேலும் சந்தாதாரர்களைச் சேர்த்துத் தரும் விஷயத்தில் தங்களால் இயன்ற ஒரு சிறிதளவிற்காகிலும் முயற்சி செய்வார்கள் என்று நம்புகிறோம். குறைந்தது மூன்று சந்தாதாரர்களையாவது சேர்த்துத் தருவது பெரிய உபகாரமாக இருக்கும். இதன் மூலம் இன்றைய சமுதாயத்தின் சூழ்நிலையில் நல்ல கருத்துகள் வளர அரும்பெரும் தொண்டு செய்தவர்களாகிறீர்கள்.

## சந்தா விவரம்:

**வருட சந்தா (சிறப்பு மலர் உட்பட) ரூ. 7-00; தனிப்பிரதி 70 காசு; ஆயுள் சந்தா: ரூ. 100 (ஆயுள் சந்தாவைப் பகுதிப் பகுதியாகவோ, மாதம் ரூ. 10 ஆகவோ, மொத்தமாகவோ செலுத்தலாம்.)**

★ சந்தாதாரராக விரும்புபவர்களும் பத்திரிகை விற்பனையாளர்களும் பின்வரும் முகவரிக்குத் தொடர்பு கொள்ளலாம்.

புதிய சந்தாதாரர்கள் பணம் அனுப்பி வைக்கும்போது, புதிய சந்தா என்று குறிப்பிட்டு எழுதும்படி கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள். பழைய சந்தாதாரர்கள், தமது கடிதப் போக்குவரத்துகள் எல்லாவற்றிலும் சந்தா எண்ணையும் முழு விலாசத்தையும் அவசியம் குறிப்பிட்டு எழுத வேண்டுகிறோம்.



ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம் காரியாலயம்
**ஸ்ரீ ராமகிருஷ்ண மடம்**
மயிலாப்பூர் : : சென்னை-600 004

ஆசிரியர்: சுவாமி சித்கனானந்தர்; துணை ஆசிரியர்: ரா. ராமகிருஷ்ணன்
பதிப்பாளர்: சுவாமி சித்கனானந்தர், ஸ்ரீ ராமகிருஷ்ண மடம், சென்னை 600004
அச்சிடுபவர்: S. இராமசுவாமி, ராஜ்ஸ்ரீ பிரிண்டர்ஸ். 97 லாய்ட்ஸ் ரோடு. சென்னை 600086